புரட்டாசிமீ 12உ மஹாலயபக்ஷ ஆரம்பம்; 25உ ஸர்வமஹாலய அமாவாசை 26உ நவராத்ரி ஆரம்பம்.



*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith.'*
*"Seek Truth wherever you can find it." But,*
*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்:. அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is. Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 20.] 1912ஞு செப்டம்பர்மீ, பரிதாபிஞு புரட்டாசிமீ [சஞ்சிகை. 6.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.

Lalita Publishing Co., Sole Agents and Managers

S. Subrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ண மதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுக்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேயுரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது.

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப்பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவர் பாடஅது படுவர்: இகபரமிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே நினைன், பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓ:-




## Joy Immanent and Transcendant.

### இன்பம்.

"களவியல்," "கற்பியல்."

——:-:——

இன்பம் என்பது புருஷார்த்தம் நான்கில் மூன்றாவது. முதலாவது அறம். தர்மமின்றி ஜீவயாத்திரை நடவாது. அறவழியிருந்துணர்ந்தார் அவ்வழியில்தானே யிருந்து பொருள் ஈட்டல்வேண்டும். ஏனெனில்பொருளின்றேல் இன்பமில்லை. அறம்பொருள் இரண்டும் சித்திக்கப் பெற்றவர்கள் தாமே இன்பமனுபவிக்கப் பாத்திரரும் அதிகாரியுமாவர். அனுபவிக்கப்படும் இன்பம் ஒன்றே. அது சிறபோதிருந்து மறைவதாயின் சிற்றின்பமென்றும், தோன்றிமறையாது உள்ளத்துணர்வில் ஊறியின்பந்தருவதாயின் அதுபேரின்பமென்றும் சொல்லப்பெறும். சிற்றின்பம் விஷயப்பற்றோடு கூடினது. பேரின்பம் விஷயப்பற்றுமட்டுமன்றி அதற்கு மூலமாய் (வேர்ஸ்தானமாய்) உள்ள வாசனை யென்னும் உள்ளத்துறையும் அவாவும் அறுக்கப்பெற்றவிடத்திலுண்டாம். விஷயத்தைப்பற்றிச்செல்லும் சுபாவமாத்ரமாய் உள்ளத்துறை வாசனை மாத்திரமாயுள்ளது அவா. அது வெளிப்பட்டு இந்திரிய வழியாய் விஷயங்களைப்பற்றும்பொழுது ஆசையாகமாறும். அவா அறுத்தாலன்றி ஆசைதீராது. ஆசை உண்மையாகத் தீர்ந்தால் அவா அற்றுப்போம். ஏனெனில் விஷயப்பற்றுக்களெல்லாம் உண்மையுணரும் வரையில்தான். உண்மையுணர்ந்து விட்டால் மாயை மயக்க மொழிந்துபோம். உள்ளத் துணர்வு உறுதிப்பட்டதாயின் அது அறிவு என்னப்படும்.

"ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாய்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு."—திருக்குறள்.

"பிறப் பென்னும் பேதமை நீங்கச்
சிறப்பென்னும் செம்பொருள்காண்ப தறிவு."

உள்ளத்துணர்வு சிரவண மநநத்தாலுண்டாகும். அது நிஷ்டை அல்லது நிதித்தியாஸனத்தால் உறுதிப்படும். உள்ளத்துணர்வு உறுதிப்பட்டால் மனத்தெளிவுண்டாகும். மன்த்தெளிவுண்டாயின் ஸ்படிகத்தன்மைபெற்று மனம் சுத்தியடையும். மனோசுத்தியில் அருள்வெளி தோன்றும். அருட்பிரகாசத்தில் ஆனந்தம் உதிக்கும். ஆனந்தபூர்த்தியில் அனுபவம் சித்திக்கும். அனுபவசித்தி முதிர்ச்சியில் சாக்ஷாத்காரம் உண்டாகும். சாக்ஷாத்கார முண்டானால் இடையறாத இன்பம் உள்ளத்தூறும். பிரிவுண்டான காலத்தும் பிரிவாற்றாமையால் வருந்த நேரிடுமேயன்றி வேறொன்றில் மனம்பற்றாது.

பிறப்பு என்பது அறியாமை. இந்த அறியாமை நீங்க ஒரேவழியுண்டு. இருட்டை இருட்டால் போக்கமுடியாது. ஆனால் அதைப் போக்க வெளிச்சம் ஒன்றே வழியாம். அவ்வெளிச்சமும் செம்பொருளாகிய சுடரின்சிறப்பாம். அதுபோல் சுயம்பிரகாசச் செம்பொருளாகிய சிவத்தின் சிறப்பாகிய அருள் ஒன்றே அறியாமையென்னும் மன இருளைப்போக்கும். சிவமும் அருளும் விளக்கும் ஒளியும்போல் அபேத சம்பந்தமுள்ளது. பேதமை காரணம், பிறப்பு காரியம்; அப்படியே செம்பொருள் காரணம், அதன் சிறப்பு காரியம்.

இப்படியுள்ள காரணகாரிய தோரணையறிதல் தத்துவஞானம். இது வாசனாக்ஷயத்தாலும் (அவா அறுத்தலாலும்) அதனாலுண்டாகும் மனோநாசத்தாலுமே யுண்டாவது. தேய்பிறைச்சந்திரன் அமாவாசையிருட்டில் முடிவது போல, வாசனாக்ஷயம் (அவா அறுத்தல்) மனோநாசத்தில் முடியும். இதையே மனோலயம் என்பர். அமாவாசைச் சந்திரன் சூரியன் ஒளியில்

மறைவதுபோல, வாசனக்ஷயத்தால் நாசமடைந்த சங்கல்ப விகல்பசக்தியாகிய மனம் அருட்பிரகாசத்தில் லயிக்கும். இப்படி அருள் வெளியில் லயப்பட்ட மனம் இருள்விட்டு மருள்நீங்கி தெருளுற்று அருள் மயமாய் விளங்கும். இதை ஔவைப் பிராட்டியார்

"அமாவாசை பூரணையாகு மவர்க்குச்
சமனுமுயிருடம்புதான்."

என்று சொல்லியுள்ளார்.

வாசனக்ஷயத்தால் மனோநாசம் சித்தித்து அருளுதயமானால் அந்த அருள் பெற்றவர்க்கு உயிர் உடம்பு என்னும் பேதமில்லை: அபேததரிசனம் சித்திக்கு மென்றபடி. "அபேத தரிசனம் ஞானம்" என்று சுருதி கூறுவதால், இதுவே பிறப்பறுக்கும் அறிவுதானும். அந்த அறிவு பிறப்பென்னும் பேதமையினுமில்லை, சிறப்பென்னும் செம்பொருளினுமில்லை. ஆனால் அறிவு அறியாமை யிரண்டிற்குமுள்ள உறவறிந்து, அவ்வுறவு தானுகித் திரிபுடி ஞானத்திலுள்ள காண்பான் காக்ஷிநீக்கிக் காண்பது 'அறிவு.' இந்த அறிவு தானுகி உண்மை ஞானம் பெற்றூர்க்கும் எடுத்த தேகம் விழுமளவும் (பிராரத்த முள்ளளவும்) வாசனு தேஹமிருக்கும். அது பற்றுக்கோடாக வரும்வினைகள் ஊழ்வினை யென்னப்படும். வினைகள் வந்துழியனுபவித்து அதில் விருப்பு வெறுப்பிரண்டு முண்டாகாதபடி அவாவறுக்க வேண்டும். ஊழ் பொருளடைவதற்கான பந்தவூழ் என்றும் வீடடைவதற்கான மோக்ஷவூழ் என்றும் இருவகைப்படும், இரண்டையும் அனுவாசனை பற்றுதபடி அவாவறுக்க வேண்டும். ஜனகர்போல் இராஜ்ய மாளினும் சுகர்போல் முற்றத் துறப்பினும் நைஷ்கர்ம வித்தியால் வாசனை பற்றுது பார்த்துக்கொள்வர் பரமுக்தி பெற்ற பெரியோராவர்."

இன்பம் இல்லறம் துறவற மிரண்டுக்கும் பொதுவாயுள்ளது. இல்லறத்தில் அது சிற்றின்பமாவது எதனுலெனில்

"அறிதோ றறியாமைகண்டற்றூற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு."

அனுபவிக்குந்தோறும் எல்லையின்றி விருப்பம் வளர்வதால், அவ்விருப்பமே அறிவை மூடி அறியாமையைத் தோற்றச் செய்கிறது. அறியாமை க்ஷணிகமாத்ரமாகையால், அதில் நிகழும் இன்பமும் சிறுபொழுதாகிச் சிற்றின்பம் எனப்படுகிறது. துறவறத்தில் அவாவறுதலே தொழிலாயிருப்பதால், அதில் அனுபவிக்கப்படும் அங்கலிங்க சங்கம சுகம் கால வஞ்சனத்தால் காலாதீதமானதாய்ப் பெருகி பேரின்பமெனப் படுகிறது. ஆனல் அது "சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்" தாதலால் அதை யெடுத்துக் கூறல் முடியாதாம். அப்படியே இல்லறத்திலும் உள்ளனுபவம் சொல்லற்பாற்ற தன்றும். அனுபவித்ததே யறியவேண்டுமன்றி, சிந்தையு மொழியும் செல்லா நிலைமைத்தைச் செப்புவதெப்படி? இப்படி வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததாய் அனுபவிக்கப்படும் இன்பம்தானே "களவியல்" என்னப்படும்.

இன்பத்தின் அகப்பொருள் எப்போதும் "களவியல்" தன்மையதே. அப்படியென்றால் சிந்தை மொழிக்கெட்டாதது என்று அர்த்தமாம். ஒன்றை மனத்தால் நினைத்து வாக்கால் வெளியிடல் வேண்டும். இவ்விரண்டுக்குமெட்டாத அனுபவத்தை வெளியிடற் கூடாமைபற்றிக் "களவியல்" என்றூர். இது துறவறத்தில் பரமுத்தியாம். இந்தப்பரமுத்தி அபரோக்ஷானுபூதியால் சித்திக்கவேண்டுமேயன்றி பரோக்ஷமாக இதை யனுபவிக்கமுடியாது. ஆதலால் இது "களவியல்" தன்மையது. மகளிரின்பத்திலும் "களவியல்" என்றது இன்பத்தின் அகப்பொருளை உணர்த்துமேயன்றி அறியாதார்நினைக்கு மாறு கள்ளப்புருஷனேடு அனுபவிக்கும் சுகமென்றாகாது. அகப்பொருள் விளங்க அனுபவித்த சுகத்தை புறப்பொருளானுணர்த்த முடியாதாயினும் தலைவன் பிரிந்துழிதான் அவனிடத்து 'அகப்பொ

ருள் விளங்க அனுபவித்ததோர் சிந்தைமொழிக்கெட்டா ஸ்வானுபவத்தை நினைந்துநினைந்துருகி உள்ளனுபவம் உள்ளத்தே நிகழ அதைப்புறப்பொருளாலுணர்த்தக் கூடாமைகண்டு வருந்துவது “கற்பியல்” என்னப்படும். கற்புடை மகளிர் தம்பதியிடமனுபவித்த அகப்பொருளின்பம் ஒன்றை வெளியிடவறியாளாயினும் அவன் பிரிந்துழி அவ்வின்ப நுகர்ச்சியை உள்ளத்துணர்வாலுணர்ந்து அந்த, உணர்வுகாரணமாக புலன் பொறிகளெல்லாம் அதிலொழிந்தொடுங்க அவ்வொழிவி லொடுக்கத்தில் அந்த அபரோக்ஷசுகத்தை யுணர்ந்து பஹிர்முகப்பட்டுழி அது காணாது மறையக்கண்டு புலம்புவதுபோல, பரமுக்தி பெற்றவர்களும் பிராரத்தவசத்தால். அபரோக்ஷானுபூதி கலையநேரிடினும், அப்படி கலையுந்தோறும் வேறொரு இன்பத்தை நாடாது அந்த அபரோக்ஷானுபூதியையே உள்ளத்துணர்ந்துருகி அதையே சேர்ந்தனுபவிக்க முயலுவர். கற்புடை மகளிர் கணவன் பிரிந்துழி பிறபுருஷனைச் சிந்தியார்போல, பாமுக்திபெற்றுள்ளார் பிராரத்த வசத்தால் சமாதிகலையினும் அதையே சிந்தையிழந்தவிடத்திற் சிந்தித்துக் கூட முயலுவாரன்றி வேறுவிஷயானந்தங்களில் விழுந்துழலார். ஆதலால் இது “கற்பியல்” என்று சொல்லப்பட்டது. களவியல்—பாமுக்தி; கற்பியல்-ஜீவன்முக்தி. முன்னது அபரோக்ஷம் பின்னது பரோக்ஷம். பரோக்ஷமென்றால் உணர்த்த உணரப்படுவது என்றருத்தம். அறிவுதானே குருவாயிருந்துணர்த்த விவேகமனமே சிஷ்யனாக விருந்துணர்த்தப் பெறுவதாகும். இதைக்குறித்து ஒருவர் “திருக்குறள்மாட்சி” கூறுங்கால் எடுத்துக்கூறியுள்ளது இங்கு முற்றும் கவனிக்கத்தக்கதாம். அந்த பாகத்தை ‘வித்தியாபானு’விலிருந்தெடுத்துக் கீழே பிரசுரிக்கிறோம்.

“இவ்விரு இயல்களைப் பேரின்பப் பொருள்களாகக் கொள்ளுமிடத்து களவியல் பாமுத்தி, கற்பியல் சீவன்முத்தி. களவியலில் அனுபவிப்பான் அனுபவிக்கப்படுந் திறம். கற்பியலில் ஆண்டானடிமைத்திறம். களவியல் பாமுத்தியென்பதை “நலம்புனைந்துரைத்தல்” என்னும் அதிகாரத்தில் “அறிதோறறியாமை கண்டற்றால் காமஞ் செறிதோறுஞ் சேயிழைமாட்டு” என்னும் 10 வது பாட்டால், இன்பானுபவத்தில் அனுபவிக்குந்தோறும் எல்லையின்றி மேலும் மேலும் விருப்பம் உண்டாகு மென்றதனாலறிக. அன்றியும் இப்பாட்டுக்குக் கூறியமுடிவுரையில் “இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கு முண்டேனும் அவள் மாட்டுக்குறிப்பால் நிகழ்வதல்லது கூற்றால் நிகழாமையறிக” என்றதனால் உயிர் தலைமகனென்றும் இறைவன் தலைவியென்றும் முன்னர்க் கூறியதை வலியுறுத்தும். உயிர் தத்துவ சோதனை செய்தவிடத்து, தலைவனையும் தன்னையும் தலைவனருளால் அறிந்து தலைவனில் அடங்கி இன்புறுதலாகிய பாமுத்தி முதற்கண்ணதாகலின், அதனைக் களவிய லென்னும் பேரால் முன்னர் வைத்தார்.

“இங்ஙனம் முத்தியடைந்த உயிர் பிராரத்வ அனுபவத்தின் பொருட்டு அந்நிலையில் நின்று நீங்கியபொழுது தலைமகனைப் பிரிந்த தலைவி. பிறிதொருவனைக் கூடி அனுபவிக்க நினையாது அவனையே நாடியிருப்பதுபோல வினைகாரணமாகப்பற்றிய விடயங்களில் அழுந்தாது அஹமுகத்தில் அனுபவித்த பேரின்பத்தையே நாடி நிற்றலால் “சீவன்முத்தி” யெனப்பேர் பெறும். இந்நிலையில் உயிர் தலைவி, இறைவன் தலைவன். இதனை “அறிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும் பிரிவோரிடத்துண்மையான்” என்னும் பிரிவாற்றாமை அதிகாரத்து 3-வது பாட்டால் தெளிக. பாமுத்தியில் அருள் தோழியாயிருந்து தன் ஜாதியாகிய சிவானந்தமென்னும் தலைமகனை உயிராகிய நாயகனுக்குக் கூட்டுவிக்கும். சீவன்முத்தியில் உயிர்சிவமாந்தன்மை யெய்தப்பெற்றமையால் ஆண்டான் அடிமைத்திறம்பற்றி தலைவியாகிநிற்குமுயிரை அருளாகியதோழி தலைமகனாகிய இறைவனோடு கூட்டுவிக்கும். இவ்வாறு அருள் என்றும் தோழியாயிருந்து பாமுத்தியில் இறைவனை ஆன்மாவிலும், ஜீவன்முத்தியில் ஆன்மாவை இறைவனிலும் சேர்ப்பிக்குமென்க.”

“முத்தியென்னப்படு மங்கையைச் சேரமுயல்பவரும்
சத்தியென்னப்படு மீசனருளின்றிச் சார்தலுண்டோ!”—

என்றதனாலுமுணர்க.

—:(o):—

உ

# INDIAN FOLK SONGS OF TRUTH AND WISDOM.

"O Thou the Granter of Boons in this Material Age!
Lancer Divine! in Grace Protect!"

## INVOCATION.

To priest and to prophet
The joy of their creeds.
To statesman and hero
The splendour of deeds;
And rest to the weary.
And hope to the strong.
For me, O my Master,
The glory of Song.

—*Mrs. Sarojini Naidu in the Indian Social Reformer.*

"கலியுகவரதா! காத்தருள்வேலா!"

பல்லவி.

கலியுகவரதா! காத்தருள்வேலா!

அநுபல்லவி.

கலியுக வரதா! வுன்னைப் பற்றினேன் பற்றறக்
கலிதீர வென்னைக் காத்தருள்வேலா! தண்டபாணி! (கலியுக)

சரணங்கள்.

I. † தண்ட பாணிக்குப் பாலொடு சந்தன விபூதிகைக்
கொண்ட பிஷேகா லங்கார வர்ச்சனை செய்கின்ற
தொண்ட ரைக்கண் டப்பன் யாரேன்று வினவ,
தொண்ட ருங்கண்ட த்வநியையே [1]சிந்தித்து யானென்றார்!
தண்ட பாணியுங் கண்டிதறிவேன் துரையப்பா! யார்? என்றார்!
[2]தொண்ட ருஞ்சிந்தித்துச் சாமி நாதனென் றுரைசெய்ய,

† Based on a realistic communication received from 'Pazha-nee's Priest': one of the Six famous hill-shrines celebrated as Subrahmania stalam or the *Abode* of the Son of God (on Earth).

(1). கண்டத்வனி—மத்தியமை வாக்குத்வனி (இது 'பச்யந்தி'யாகும்.)
(2) பச்யந்தி வாக்கின் த்வனியாகிய 'பரை'யைச் சிந்தித்து.

தண்ட பாணியின் கைத்தண்டம் தூண்டாவிளக்குச் சோதியாச்சே!
தொண்டருமந்தத் தேவருங்காணுச் சுயஞ்சோதிகாணக்கண் கூசியேசித்
[தம் கலங்கலுற்றார்.
—(கலியுகவரதா!)

II. கண்டேனதிர்சயங் கலங்கினேன் சித்தமென் றவர்விண்டார்!
உண்டேனுளச்சோதி யுறங்கினேன் துயில்விட்டு குஹனருகே!
"கொண்டேனுனையானுக் கொள்கையிதோ ஸத்தியம்" என்றமசொல்லே
பண்டே யிருந்தெனைப் பழக்கிய வழக்கால் பயனுற்றதே!
‡ ஆண்டே கலியுக வரதாவென்றனை யழைத்தாரை யன்றநீ காக்கலையோ!
வேண்டேன் வேறொன்று மாண்டே யுன்னருள் நிறையப்பெற்றேன்!
மீண்டேன் மீளா நரகென்னும் சந்தேக விபரீதம் விட்டுப்
பூண்டேனுன்பணி பொய்யிலே னநீவாடுருவா யஹத்தொடேபுறமிருந்
[தாண்டவனே!
—(கலியுகவரதா!)

III. கலியுகவரதன் ஆகியஆண்டவன் மகிமையை யின்னவென்
றெடுத்துரை செய்யப்போமோ!
"கலியுகவரதா!" எனத்துதிசெய்தழை சங்கப்புலவரைப் *
பங்கமுறுதன்று காத்தவேலன்!
கலிமலியுலகில் வலிமிகுதுஷ்டர் சிஷ்டரைப்படுத்தும்
பாடெல்லாந்தீர்க்க வந்தவையன்!
வலியுறவோங்கும் விருத்திராஸுரன் வலிகெடத்தண்டமும்
தபோவலிமிகுந்த தாரகாஸுரன்
வலிகெடவேலும் தாங்கியவீரன்! துஷ்டநிக்ரக
சிஷ்டபரிபாலந தீக்ஷாபுருஷன்!
வலியாரெளியாரை வல்லபங்காட்டிக் கலியால்வருங்கேடு
மலியாதுலகைக் காக்கவேபிறந்தவன்!
கலியுகந்தனிலும் கடவுள்பெருமையைக் கரதலாமலகம்போல்
காட்டவென்றே வந்தகுமரன்!
சலியாதன்பர் அழைத்தழைத் தழுந்தோறும்
நலியாதவரை நயமுடன்காப்பவன்!
கலியுகவரதன் ஆகியஆண்டவன் மகிமையை யென்னா
வெடுத்துரை செய்யப்போமோ!
—(கலியுகவரதா!)

ஓம் தத்ஸத்.

K. S. S. A.

‡ திருமுருகாற்றுப்படை பாடியருளிய நக்கீரதேவர் சரித்திரம் பார்க்க.
* மதுரைக் கடைச்சங்கப் புலவராகிய நக்கீரரை இன்னும் 999 பேர்களோடும்பூத புலியாவதினின்றும் காத்தவரான ஸஹஸ்ரான்ம பரிபாலகமூர்த்தி.

## "The Kingdom of the World is become the Kingdom of God and His Son."

### "ஒருமுருகா, வருமுருகா, தருமுருகா, திருமுருகா!"

—:(*):—

(ஓர் உண்மைக் கதை.)

"ஒருமுரு காவென்றெ னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம்பா நிற்பத் தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே."

[முருகன் = தெய்வத்தன்மையுடையவன் = இளமைப் பருவமுடையவன்.]

சோழநாட்டிலே தனஞ்சயன் என்றொரு வைசியனிருந்தான். அவன் பத்நிபேர் வாசுகி. அவள் தாய்தந்தையர் குமாரக்கடவுளைக் குறித்துச் செய்த அருந்தவத்தினால் சிப்பியில் முத்துத் தோன்றினாற்போல அவர்கள் வயிற்றில் உதிக்கலானாள். அவள் குழந்தைப் பருவமுதல் 'முருகா, முருகா, முருகா' வென்று முருகனையே தியானஞ் செய்துகொண்டிருப்பாள். கருப்பத்திலேயே . அவளுக்கு சுப்பிரமண்யஸ்வாமி திவ்விய யௌவன புருஷனாகத் தரிசனந் தந்தமையால், மாயைவந் துற்றபோதும், மனத்துட்பதிந்த திவ்யவாசனையால் 'முருகா, முருகா, முருகா' வென்று முருகனையேபஜித்துக்கொண்டிருந்தாள். இது அவளுக்கு சகஜமாக வமைந்துவிட எல்லாரும் அவளை முருகம்மையாரென்று கூப்பிடத் தொடங்கினார்கள். இது அவளது உள்ளத்தனுபூதியைப் பின்னும் வற்புறுத்துவதாயிற்று. இப்படியிருக்கும் நாளில் அந்தப் பெண்ணுக்கு விவாகம் செய்யுங்காலம் வந்தது. விவாகத்தில் விருப்பிலளாயினும், தந்தைதாய் சொற் கடக்கப்படாமல் தன்னினத்தாரில் ஒருவனை வரித்துத் திருமணங்கொண்டாள். திருமணங்கொண்ட பெண் காலக்கிரமத்தில் புக்ககம் சென்று புருஷனோடு வாழலானாள். புருஷன் தன்பத்நியின் சுபாவமறிந்திலன். ஆயினும் அவளிடம் 'முருகா, முருகா, முருகா' என்னும் சப்தம் ஒலிப்பதன்றி வேறு விபரீதம் ஒன்றுங் கண்டிலனால், அவ்வுமதை யொரு பித்தெனக்கருதிப் பொறுத்திருந்தான்.

"திரைகட லோடியுந் திரவியந்தேடு" என்றிருத்தலால், காலவளவிலே தனஞ்சய செட்டி திரவியசேகரத்தின் பொருட்டுக் கப்பலேறித் தூரதேசம் போகலானான். அப்பொழுது அவனது பத்நியும் கூடவருவதாய்ப் பிடிவாதம் செய்ய, அவன் என்ன சொல்லியும் சமாதானப்படவில்லை. தூரதேசத்துக்கு வியாபார நிமித்தம் போகையில் மனைவியையும் கூட வழைத்துக்கொண்டுபோய் அல்லற்பட அவனுக்கிஷ்டமில்லை. இந்த அவதியில் அவனுக்கொரு யுக்தி தோன்றிற்று. "முருகனிருக்க உனக்கென்ன வந்தது! நீ இங்கேயே இருப்பாய்: நான் திரவியந் தேடிக்கொண்டு விரைவில் திரும்பி வந்துசேருவேன்" என்றான். அந்த அம்மாளுக்குத் தன் புருஷன்வாக்கிலிருந்து முருக சப்தம் வரவும் தெய்வபக்தியிலனாய்ப் பணத்தின்மேல் தானே யாசைவைத்தலைகிறானே யென்று பச்சாதாபப் பட்டுக்கொண்டிருந்த அவள் உள்ளங் குளிர்ந்தது. தன்னுள்ளக் குறையல்வ யுன்னியே பகவான் முருக சப்தம் அவன் வாக்கினின்றும் வரச் செய்தாரென்றுள்ளங்குளிர உவந்து நின்றாள். ஏனெனில் "முருகனிருக்க உனக்கென்ன வந்தது!" என்ற சப்தம் அவளுக்கு குருபதேசமாகப்பலித்தது. "எல்லாம் முருகன் செயல்" என்று அவள் உள்ளத்தில் உன்ன, எதைப்பார்க்கினும் அவளுக்கு முருகன்மயமாக விருந்தது. "எங்கும் எல்லாம் முருகனாயிருக்க யார் எங்கே போகிறது எங்கேவருகிறது!" என்று அவள் அவாவறுத்த சிந்தையினளாய் அகமகிழ்ந்திருந்தாள். அந்த அகமகிழ்வுக்குக் காரணம் அவளுக்கு முருகன் பிரத்தியக்ஷமாய் உள்ளும் புறமும் ஒக்கத்தோன்ற எல்லாம் முருகமயமாயி

ருந்ததனால் அவளுக்கு முருகக்கடவுளின் தியானம்பலித்துசகஜானுபவமாய் விட்டதேயென்க. தன்பத்னி தியானயோகத்தி லிடையறாதிருந்து வந்ததைப் பித்தென்றெண்ணிய தனஞ்சயன், செட்டிப்பிள்ளை யாதலால், அவள் தியேயாகாரமாய்ச் பாவனசமாதியிலிருப்பதை யுணராமல் தான் கடல்யாத்திரை போவதற்கிடையூறாயிருந்த தன்மனையாள் முருகன் பேரைச்சொன்னதும் மனதொப்பிச்சுப்பாவிருக்கக்கண்டு, "முருகன் தந்திரம்" பலித்ததென்றும் தான்செய்த யுக்தி நல்லயுக்திதானென்றும் சந்தோஷித்துச் சடுதியில் யாத்திரைக்குப் புறப்பட்டான்.

முருகம்மையாரென்னும் காரணப்பெயர் பெற்ற வாசுகியம்மை தூயமனத்தளும் சுத்த பதிவிரதையுமானதால், தன் கணவனே முருகனுய் விட்டதாலும், முருகனே ஸர்வமாய் விட்டதாலும், பிரிவுக்கிடமின்றிக் கூடல் ஊடல் என்கிற பேதமும் காணுளாகி திருமுருகன் தரிசனத்தில் மனம் லயித்தவளாகி "குஹப்ரஹ்மம்தத்ஸத்" என்று சும்மாவிருந்தாள்.

அவளைச்சேர்ந்தோர் அவளுண்மையை உணரமாட்டாது, புருஷனிருக்குங்காலையிலேயே முருகன் பித்துக்கொண்டவள், இப்பொழுது சித்தப்பிரமை பிடித்துப் போய்விட்டதாகப் பரிதபித்து அவளை பந்தோபஸ்துடன் காத்துவந்தார்கள். இப்படியந்த அம்மையார் பலவருஷங்கள் ஒரு நிமிஷமாகத் தியேய சமாதியிலிருந்தாள். ஊருக்குப்போன அவள் புருஷனும் வேண்டிய அளவு தனந்தேடிக்கொண்டு திரும்பிவந்தான். அவன் வீடுசேருமுன்தானே, அவளைச் சேர்ந்தவர்கள் "அப்பா உன்மனைவிக்குமுருகன் பித்து முற்றிச் சித்தப்பிரமையாகிவிட்டது. நீ போனதுமுதல் இன்னும் அவள் அதே நிலைபிலிருக்கிறாள். இவ்வளவு தனவந்தனுகியும் அனுபவிக்க உகந்த மனைவியில்லாமல் தெய்வம் உன் தலையில் எழுதியதே"யென்று அவனுடன் அங்கலாய்க்கலானார்கள். தனஞ்சயசெட்டியும்அதையுட்கொண்டு "அறம்பொருள்என்னும் இரண்டும் வாய்த்தவிடத்துக் காமந்கார்ச்சிக்கு விக்கம் நேர்ந்ததே! யென்று உள்ளுற வருத்தமுற்றவனுகி, எல்லாவற்றிற்கும் வீடுபோய்ப்பார்ப்போமென்று வீடுவந்து சேர்ந்தான்.

முருகம்மையார் தன்கணவனைமீண்டுங்காணாதியேயசமாதியிலிருந்தபடியே "வருகமுருகா" என்று தன்கணவனை நல்வரவுகூறியழைத்தாள். "மோனமென்பது ஞானவரம்பு" என்றபடி இதுகாறும் மோனக்கலையாதிருந்து விட்டு, இப்பொழுது புருஷனைக் கண்டதும் "வருக முருகா!" வென்று வாய்திறந்துரைத்ததைக்கண்டு அவளிடத்து அசூயை கொண்ட உற்றார் மற்றார், அவள் புருஷன் மனம் அவளிடம் பற்றாதபடி செய்ய ஒரு சூழ்ச்சி செய்யத் துணிந்தார்கள். அவள் "வருகமுருகா!" என்றழைத்ததால் தன்னையறியாமல் தன்மனக்குறை தீர்ந்து உள்ளங்குளிர உவகைபூண்ட தனஞ்சயசெட்டியிடம் "அப்பா இவள் செய்கை யென்னவோ மாயமாயிருக்கிறது! இவள் சித்தப்பிரமைகொண்டவள்போல் வேஷம்போட்டு நீ யில்லாதபோது என்ன செய்தாளோ நாங்கள் சொல்லமாட்டோம்! உண்மை யறிந்துகொண்டு நீ யவளைத் தொடு!" என்று துருபதேசம்செய்து வைத்தார்கள். மதியிலனுகிய தனஞ்சயனும் உள்ளத்துவகை தூண்டவும் தன் கள்ளநெஞ்சில் தோன்றிய சந்தேக விபரீதங்களால் விகாரப்பட்டு விசாரந் தலைக்கேற சிந்தாக்கிராந்தனுனன்.

"முருகன்" என்கிற சப்தத்தில் ஏதோ வசியமந்திர மிருக்கிறதென்று ஏற்கனவே உணர்ந்தவனுன தனஞ்சயசெட்டி, இனி தன் மனைவி முருகசப்தத்தை உரைக்காதபடிச் செய்வேனென்று அவளைக் கண்டனை தண்டனை செய்து "முருகா" வென்று இனிநீ சொல்லக்கூடாது. முருகக்கடவுள் பேரைச் சொல்லவேண்டின் அவருக்குள்ள ஸஹஸ்ர (ஆயிரம்) நாமங்களில் வேறெதையாவது சொல்லிக்கொள்: முருகா

வென்று இனிக்காதில் விழுந்தால் உன்னை வெட்டிவிடுவேனென்று கண்டிப்பாய் பெண்டாட்டிக்குத் தாக்கீது செய்தான்.

புருஷன் ஆஜ்ஞைக்கு அடங்கினவளாய் இல்லையென்று சொல்லக் கருதியும் வாஸனா பலத்தால் இனி அப்படிச் சொல்லவில்லை யென்று வாக்குக் கொடுக்க நினைத்து வாய்திறந்தவள், வாக்கினாலதைச் சொல்லும்போது "இல்லை முருகா" வென்று வாயில்வா வழக்கபலத்தால் அப்படியே சொல்லிவிட்டாள். அவள் கணவனுக்குக் கோபம் பொறுக்க முடியாமல் வர, அவன் இனி அப்பேரைச் சொல்வதில்லை யென்று கைபோட்டுச் சபதம் செய்துகொடு! என்று உரப்பிக் கேட்டான்.

பதிசொற் கடவாத பாவாய் அப்படியே கைபோட்டுக் கொடுக்கக்கருதி கைநீட்டி வாயால் வாக்குக்கொடுக்க வாய்திறந்தவள், "இனி அப்பேரைச் சொல்வதில்லை முருகா" என்று வாக்குப் பழக்கத்தால் நிர்விகல்பமாகத்தானே சொல்லி விட்டாள். கையுங் கத்தியுமாக நின்ற சபதம் கேட்ட கணவன் "இனி அப்பேரைச் சொல்வதில்லை" யென்பதோடு நிற்காமல் "முருகா" என்கிற சப்தம் அதற்கு அடைமொழியாக வந்ததை நினைத்துக் கோபம் பொருஞகி சபதம் கொடுத்த அவள் கையை வாளால் வெட்டித் துண்டித்துவிட்டான்.

முருகம்மையார் கை வெட்டுண்டும் அதை யோராராகித், தன் கணவன் முருகநாமத் துவேஷனைப்பற்றி யுளத்தே சிந்தித்தவராகி ஏதும் செய்யத் தோன்றாது "திருமுருகா இது சமயம் வந்து காத்தருளே" யென்று கூவிப் புலம்பலானர்.

தனஞ்செய செட்டி:—உன்னுடைய முருகன் திறத்தைத்தான் பார்ப்போம். அவன் வரட்டும் சொல்கிறேன்! அவன் காலையும் துண்டித்து விடுகிறேனென்று வீரம்பேசி வெறி தலைக்கேறினவனாய்க் கோபாவேசங் கொண்டு குதித்தான்.

சக்திக்கு வித்துத் தனதுபசாந்தமேயென்ற படி, முருகம்மையர் பரைவாக்காலே திருமுருகா வென்று ஓலமிட்டழைத்த அரவம் குஹப்ரஹ்மமாகிய முருகக்கடவுளை அவர் குகையினின்றும் வெளியிழுக்கலாயிற்று.

"தேரூர் தேறுதற்கு தேவியரா சக்தியுடன்
வாரார் முருகையன் வர்ணமயில் வாஹனமேல்"

என்று அசரீரி வாக்கு அண்டம் அதிரக் கேட்டது. எல்லாரும் பிரமித்து நின்றார்கள். அப்பொழுது முருகக்கடவுள் கிரியாசக்தியாகிய தேவயானை யொருபக்கமும், இச்சாசக்தியாகிய வள்ளியம்மை யொருபக்கமும் அமையப்பெற்று, ஞானசக்தியாகிய வேல் தாங்கி மயில்வாகனருடராய் எழுந்தருளி முருகம்மையாருக்குத் தரிசனந் தந்தருளினர். அவர் சந்நிதான மாத்திரத்தில் வெட்டுண்ட கை ஒன்றுபட்டுச்சேர்ந்து முன்போலாயது. இதைக்கண்டு தனஞ்சய செட்டி திடுக்கிட்டுத் தன் கோபாவேச மடங்கினவனாய் ஏதும் தெரியாமல் தியங்கினன்.

திருமுருகன் அறுபடைகளோடு முருகம்மையாருக்குத்தரிசனந்தந்தருளி அவர்கையையொன்றுபடுத்தினதன்றி, அந்த அம்மையாருக்கு சாலோகசாமீப முக்தியளித்துத் தமது உலகுசேர்ந்து இச்சாசக்தி, கிரியாசக்தி யென்னும் நம் தேவிக்குக் குற்றேவல் செய்திருப்பாயாக வென்று அருளினர். முருகம்மையார் தனக்கு என்றென்றும் உடனிருக்கும்படியான சாலோகசாமீப்ய ஸாம்ராஜ்யம் கிடைத்ததற்குவந்து ஆனந்த ஸாகரத்தில் மூழ்கினவராகி கற்புடை மங்கையாராதலால், தன் கணவனுக்கும் அவ்வுலகிலிருக்க அருள்புரியவேண்டுமென்றார்.

அடியார் வேண்டினதை வேண்டியவாறருளும் தயாபரனாகிய முருகவேள் பூவோடு

சேர்ந்தநாரும் மணம்பெற்றதுபோல், உன்பொருட்டு அவனுக்கும் சாலோகசாம்ராஜ்யமளிப்பனென்று, அவனிடத்துள்ள பொருளாசைதீர, அப்பா உன்பொருளையெல்லாம் எனக்களிப்பாயாகவென்று கேட்டார். அவனும் அவனது பூர்வபுண்யவசத்தினாலே அப்படியே தந்தேனென்று தத்தம் செய்துகொடுக்க "தனந்தந்த செட்டி" என அவனைத்திருவுளமகிழ்ந்தழைத்து தம்முலகிலிருக்சுத்தக்க ஸாலோக ஸாம்ராஜ்யமளித்தார். அவனுக்குப் பூலோகமெல்லாம் கந்தமலையாகத் தோன்றலாயிற்று. இப்படியாக "The kingdom of the world is become the kingdom of God and His Son" என்ற சுருதிவாக்கு (Revelation) உண்மையாகப்பலித்தது. இதை

> "ஒருமுருகாவென்றென் னுள்ளங்குளிர வுவந்துடனே
> வருமுருகாவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
> தருமுருகாவென்று தான்புலம்பாநிற்பத்தையல்முன்னே
> திருமுரு காற்றுப் படையுட னேவருஞ்சேவகனே."

யென்று வாழ்த்தியுள்ள ஸ்ரீகாளத்தி புராணத்திற் காணலாம்.

——:-:——

## WEALTH SUPREME.

**"Ask for the Kingdom of God and all other things will be added to it unto you."**

### பரமைசுவரியப் பிரஸாதம்.

——:(*):——

"ஒன்றேகுலமும் ஒருவனே தேவனும்" என்றார் எம்பெருமான் திருமூலதேவர். மன்குலம் ஒன்றேயாக, அதில் ஜாதிவர்ண பேதங்கள் ஏற்பட்டதென்னே யெனில், சொல்லுவம். தோப்பு ஒன்று: மரங்கள்பல. இது சமஷ்டி வியஷ்டிபேதம். தோப்பு ஒன்று, மரங்கள் பலவாயிருக்க, பல மரங்களிற் சில மாமரம், சில தென்னமரம், சில புளியமரம், இப்படியாக பல ஜாதி மரங்கள் இருக்கலாம். இருந்தாலும் தோப்பு ஒன்றே. மரங்கள் பலவும் ஒரேஜாதியாகவின்றி தே, மா, புளி, யென்ன பலஜாதிகளாயிருக்கலாம். இதனால் "தோப்பு ஒன்று" என்கிற பாவத்துக்குக் குறைவொன்று மில்லை. அஃதேபோல மன்குலமொன்று: மன்னுயிர்பல. அம் மன்னுயிரில் மானிடர்களாயுள்ளாருள் ஜாதி வர்ண பேதங்கள்பல; பேதமுண்டானாலன்றி அபேத பாவத்துக் கிடமில்லை. பல பேதங்களில் அபேதமாயிருப்பதையுணர நியதிகளையவேண்டும். மரத்தினுடைய இலை, பூ, காய், கனிகளைப் பார்த்தால் தே, மா, புளியென பேதமேற்படும். இலை, பூ, காய், கனியென்னு மிவ்வுறுப்புகளை நியதிகளைந்தால், (உணர்ந்து தள்ளினால்) பரமெல்லாம் ஒன்றுகிறது. இது வியஷ்டியிற் பலவாயினும் சமஷ்டியில் தோப்பு என்னும் ஒரே பாவனைக்கிலக்ஷியமாகிறது. அஃதேபோல, குணபேதங்களாலும், விருத்தி பேதங்களாலும் உண்டான வேற்றுமைகளை யுணர்ந்து அவைகளைத் தள்ளிப் பார்த்தால் எஞ்சி நிற்பது பாவனையும், பாவனாமூர்த்தமான மன்னுருவுமேயாம். மன்னுருவெல்லாம் சேர்ந்தது மன்குலம். இந்தக் குலம் ஒன்றே. இப்படியுள்ள பாவனாமூர்த்தங்களெல்லாவற்றிற்கும் அதீதமாய், அவற்றிற்கு அதிஷ்டானமாய் (உள்வசிப்பதாய்) அவையெல்லாவற்றிற்கும் அறிவை யளிப்பவனாய் (அறிவுக்கறிவாய்) என்றும் உள்ளவனா யிருப்பவன் ஒருவனே. அவன் தேவன் அதாவது திவ்விய ஸ்வரூபி. "கடவுள்" தத்துவங்களெல்லாம் கடந்துள்ளார். அந்தக் கடவுளை தத்துவங்களால் அறிய முடியாது. ஆயினும் தத்துவஞான மில்லாவிடில் தள்ளவேண்டியதிது வென்று நன்றாய்த் தெரியாது; ஆகையால் தத்துவங்களை யுணர்ந்து, தத்துவ ஞானத்தால் அவைகளை நியதிகளைந்து, தத்துவங்களுக் கெல்லாம் அப்பாலாய் உள்ளதை யுணர்ந்து, அப்பாலுக் கப்பாலாயுள்ளதைப் பற்றவேண்டும். கடவுள் பற்றற்றவராதலாலும் அவரை மனமொழி மெய்களால் பற்றுதல் முடியாதாகையாலும், பற்றறப் பற்றின தோன்றும் அப்பாலுக்கப்பாலா யுள்ள

உபாஸனா மூர்த்தியையும் பற்றின பற்றறப் பற்றற்று நின்றால், இந்த அவதூதநிலையில் கடவுளை ஸ்வானுபவத்தா லறியலாம். "அதுவானால் அதுவாவர் அதுவேசொல்லும்" என்றபடி, அந்த அனுபவம் ஸ்வானுபவச் செல்வருக்குத்தான் தெரியும்; வேறுவிதமாய் அதை யறிவது கூடாமைபற்றி, "அறிந்த அறிவழிய வேண்டும், அப்புறந்தான் ஐயா சுகம்" என்று சொன்னோம் ஆனந்தத்தாய். "அறிவார் பராசக்தி ஆனந்த மென்பார், அறிவார் அறிவுருவா மவள் என்பார்" என்ற திருமந்திரோபதேசத்தினால், "ஆனந்தத்தாய்" என்று நாம் கூறியது "அறிவுருவாம்" இந்தப் "பராசக்தியையே" யன்றி வேறல்ல. அறிவுருவாகிய இந்தப் பராசக்தியும் உருவழிந்தவிடத்தில் எஞ்சி நிற்பது "உருவற்ற" அதாவது "அரு"வான "அறிவு." அறிவு ஒன்றே யாதலால், அதற்கு அரூபமும் ஸ்வரூபமும் எப்படி வந்தது! அருவமும் உருவமும் உண்டேல், "அருவுரு"வும் உண்டென அமையும். ஏனெனில் "அருவுரு" வின்றி "உரு" அருவில் ஒடுங்காது. "உருவரு" வின்றி "அரு"வும் "உரு"வா யமையாது. ஆகையால் அரு, உரு, அருவுரு என்னும் மூன்றும் அறிவுக்கு லக்ஷணமாக ஏற்படுகிறது. விலக்ஷணமான அறிவுக்கு லக்ஷணம் கூறுவது எப்படி யென்றால் அறிவாலறிந்ததை அறிவழிந்த அனுபவத்திற் குணக்குறி பலவால் கூறுத லாகாதாயினும் த்ரிபுடி ஞானமுள்ள வரையில் லக்ஷியத்திற்கு லக்ஷணம் கூறலாம். இதையே "இலக்கியங் கண்டதற் கிலக்கணம் கூறுவர், புலவர்" என்றார். வித்தியா ஞானம் (Knowledge of Science) பெற்றவர்கள் தாம் திரிபுடி ரஹிதமாய்க் கண்டனுபவித்த லக்ஷியத்துக்குத் திரிபுடி ஸஹிதமாயுள்ள லக்ஷணங்கூறுவர்.

இப்படியாக ஆய்ந்தோய்ந்து அனுபவமே காரணமாகி அறிந்த அத்வைத வஸ்து "காட்டுமக்குறியுங் கடந்தது" பற்றி சுட்டிகாட்டத்தக்கவைக ளெல்லாவற்றையும் வேதங்கள் முறையிட்டும் சுட்டியும் காட்டி, இவைகளெல்லாவற்றையும் நேதி வாக்கியத்தால் (ந-இதி=இது வல்ல) நேதித்துத்தள்ள காட்டுக்குறிகடந்த காரணனை மௌனப்பிரசங்க முத்திரையால் தக்ஷிணாமூர்த்தி காட்டச், காண்பான் காட்சி காண்பொருள் என மூன்றுங் கடந்தவிடத்தே பக்குவிகள் அதைக்கூடிச் சுகிப்பார்கள்.

"அதுவென்றால் எதுவென வொன்றுடுக்கும் சங்கை, ஆதலினா லதுவெனவும் அறவே விட்டு" குருபரம்பரையால் வந்த அனுபவத்தை குருவின் அனுக்ரஹம்பெற்று குருவருளால் அறிந்துய்யவேண்டும்.

இப்படி அத்வைத வஸ்துவை யறிந்தனுபவித்தபின்னும், அந்த அனுபவம் கலையாமற்றானே போனவழிபற்றி மீண்டும் வெளிவர வேண்டும். இதற்குக் கடவுள் ஒருவரையே பற்றினால் அவர் நிஷ்கள, நிர்க்குண, நிராமய, நிராலம்பமா யிருத்தலால் வெளிவரமுடியாது. ஏனெனில் அவரிடத்தில் அஹம்-புறம் என்கிற வேற்றுமையுமில்லை யாதலால், உள்ளென்றும் வெளியென்றும் சிந்திக்க இடமில்லை. ஆகையால்தான் அவர் மோன வெளியிலேயே இருப்பாராயினர். "மோனமென்பது ஞானவரம்பு."

இப்படி நித்திய மௌனியாயுள்ளவர் மகிமையை யறியவேண்டுமானால், அவருடைய மஹிமையே உருவாயுள்ள தேவியை வழிபடவேண்டும். அந்த தேவிதான் "அறிவுரு." உருவைப் பற்றினால், அது சுத்தாசுத்தமென்கிற பேதத்தைக் கற்பித்துக்கொண்டு ஸ்வரூபமென்றும் விரூபமென்றும் பற்பல கற்பனைஜங்களை யுண்டுபண்ணும். இதைத்தான் மாயையென்று சொல்கிறது. சுத்தமாயை ஊர்த்துவகதியாகவும், அசுத்தமாயை அதோகதியாகவும் செல்லும். மாயைபற்றினால் "கோழை மனம் குடிகெடுக்கும்." ஆகையால்தான் தேவியுபாஸனை செய்கிற

வர்களெல்லாம் "கோழைமனம் குடிகெடுக்காதென்னைக் காத்தருளத் தயவுமிக வேண்டுந்தாயே!" என்று அஞ்சலிஹஸ்தராய்த் தேவியைவேண்டி நிற்பது. தேவி தன் ஸ்வரூபத்தைக்காட்டினும், அவளுடைய மஹாமாயை மயில்ரூபமாய் வந்து உடனுக்குடனே அதை மறைத்துவிடும். ஆகையால் "தற்பரமாய் எங்குநிறை ஸஹஸ்ர தள மலர்மீதுறையம்பிகே! உன் ஸ்வஸ்வரூபங் காட்டித் தன்மயமா யுன்னோடைக்கியந் தந்தருள வேண்டுந்தாயே!" என்ற உபாசகன் மாயையின் சூத்தையுணர்ந்தவனாய்ப் "பின்னுமெனை மாயை பற்றாதாண்டருள்செய் தயாநிதே!" யென்று வேண்டிவெருவ நின்றான்.

புலிவாய் முன்னே நின்று என்னை விழுங்கியும் விழுங்காதே காப்பாற்றவேண்டு மென்றால், அது என்னசெய்யும்? அப்படியே! யென்று மனுஷனைப் பக்ஷணம் செய்துவிடும். அதன் வயிற்றிற்போனபிற்பாடு மனிதன் ஜீரணமாய்ப் போனால் புலியென்ன செய்யும்! "வாதாபி ஜீரணோபவ!" என்ற கும்பமுனிபோல், அந்தப் புலியை அதன் வயிற்றிலிருந்துகொண்டே ஜீரணம் செய்யத்தக்க சக்தி எவனுக்குண்டோ அவன்தான் மாயை மயக்கொழிய மாயையை வெல்லத்தக்கவனவன். தாயின் வயிற்றுட் சென்றபின் அங்குள்ள உதராக்னியினால் ஜீரணமாகாமல் ஜீரணோத்தாரணமாய் வருவது எது? விந்துவொன்றே நாதஞ்சேரக் கருத்தரித்துப் பிண்டமாகி, உதராக்னியினால் ஜீரணிக்கப்படாமல் ஜீரணோத்தாரணமாய்ச் சிசுவாகிவெளிவரும் சக்தி வாய்ந்ததாம். ஆகையால் பரவிந்துவில் உற்பத்தியான குமாரக்கடவுளே மாயைமயக்கொழியக் காக்கவல்லவர். அவர் தாயிருக்கத் தாயொழிவில் உற்பவித்த உக்கிரமூர்த்தி. பரசிவத்தின் பிந்துவிலிருந்துதித்துச் சரவணைப் பொய்கையில் மும்மல சம்மந்தமின்றி அறு பொறியும் அறுமுகமாய் அவதரித்தவராதலால் அவர் ஒருவரே பரமைசுவரியமுமாய் பரமைசுவரியமும் தந்து பாலிக்கத்தக்கவராம். அவர் நல்ல ப்ரஹ்மஸ்வரூமே யாதலால் "ஸுப்ரஹ்மண்யம்" எனக் காரணப்பெயர் பெற்றார்.

"ஆறுறமோராறும் அறுமுகனும் ஒருமுகமாய்த்
தோராரு மூரூராய்த் தேடுதற்கோ நீ யொளித்தாய்!"

அவர், 36-தத்துவங்களும் ஆறுபொறிகளாக, அறுபொறிகளும் அறுமுகமாயிருந்தது. அந்தர்முகத்தில் (ஆறுதாரங்களோடு கூடிய) ஒருமுகமாகி, தேஹங்கள் பல்கோடி நிறைந்த லோகங்கள் பலவாக அவற்றிலெல்லாம் உன்னைத் தேடுதற்கென்றே குன்றுதோறுமுள்ள குகைபோல், ஜீவப் பிராணிகளின் ஹிருதயகமல கர்ணிகையிலுள்ள தஹராகாசமாகிய குஹையில் தன்னை ஒளித்து நிற்கும் குமாரக்கடவுளை யாதாமொருவர் உபாஸித்து உண்மையறிந்து அவனுடைய அருள்பூரிக்கப் பெற்றவராகிறாரோ அவர் பரமைசுவரிய பாக்கியம் பெற்றவராவர். ஏனெனில் அறிவுடையாராகலின். "அறிவுடையார் எல்லாமுடையார்." இப்படி பரம ஐசுவரியமும் தானேயாகவிருப்பவர் குஹப்ரஹ்மமாகிய குமாரக்கடவுளே. இவர் "தேஹாலயம்" என்று சொல்லும் ஹிருதய கமலத்திலுள்ள குஹை ஸ்தானத்தில் ஒவ்வொரு பிராணியின் தேஹத்திலும் பெரும் புதையலாகப் புதைந்து கிடக்கிறார். இதைப் புதையலை யெடுத்தாளத் தக்கவர் யாரோ அவருக்கு எல்லா ஐசுவரியமும் சித்திக்கும்.

இவரைத் தேடியலைந்த அன்பர் ஒருவர் இவரைத் தேடிப்பிடித்து இவர்செய்யும் விளையாட்டைக்கண்டு பொறாராகிப் போற்றுகிறார்:—

"ஈராறுயர்செவியாய் இருந்திலையோ காண்டற்கு!
வேறுருவேனயன்றி விருப்புற் றளிப்பதற்கு!"

இப்படி அடியார் அன்பால் போற்ற "ஒருமுருகாவென்றென் னுள்ளங்குளிர வுவந்துடனே, வருமுருகா வென்று வாய்வெருவாநிற்பக் கையிங்ஙனே" (வெட்டுண்டு வேறானதைத்) "தருமுருகாவென்று தான்புலம்பா நிற்குந் தையல் முன்னே" (முருகம்மையார் முன்னே) "திரு

முருகாற்றுப் படையுடனேவருஞ் சேவகனே"—

"தேளூர்தேறுதற்கு தேவிபாரா சக்தியுடன்
வாரார் முருகையன் வர்ணமயில் வாஹனமேல்."

வர்ணமயிலாகிய, இந்திரஜால மஹேந்திர ஜாலங்களெல்லாம் சூத்தாக நடிக்கும் மாயையைத் தனக்கு வாஹனமாக (தன் இஷ்டம்போல் தன்னைத் தூக்கிச்செல்லும் ஊருதியாக)க் கொண்டவர் மாயையினின்றும் விடுபட்ட பராசக்தியுடனே இளமைப்பருவம் மாறாதவராய்த் "தேளூர் தேறுதற்கு" அவருடைய திவ்யதரிசன மளிக்க வருகிறார் பாருங்கள். இவருடைய பரமைசுவரிய மூர்த்தத்தைப் பரமசிவனார் தேவியாராகிய உமையம்மையாருக்கு (தபோ மஹிமையால் சித்தவிருத்தி நிரோத வித்தி பெற்று அறிவுமயமாய அறிவுருவுக்கு)ச் சொல்லியருளியபடி அவர் மஹிமையைக் கீழே வரைகிறோம்.

குமாரக்கடவுளினுடைய பரமைசுவரியமகிமை.

பரமசிவனார் உமையம்மைக்குச் சொன்னபடி:—

1. நம் குமாரனே எல்லாத் தேவவடிவும் (சமஷ்டி தேவதையும்) எல்லா உலகவடிவும் (சமஷ்டிப் பிரபஞ்சமும்) எல்லாவுயிர்களின் வடிவும் (விராட் ரூபியும்) ஆக விளங்குகிறான். ஆகனால் அவனே சாக்ஷாத்கார ப்ரஹ்மமாவன்.

2. கௌரியே! உலகினிடத்தே எந்தப்பொருள்களாவது உயிர்களாவது மகிமை, லக்ஷ்மிவிலாஸம், தாட்டியம் உடையனவாய் விளங்குகின்றனவோ, அவையெல்லாம் நமது மைந்தனுடைய மகிமையில் ஓரிலேசிலே லேசந்தானுமுள்ளதென்றறியக் கடவாய்.

3. ஒரு விளக்கினின்றும் மற்றொரு விளக்கேற்றப்படுவது போல ஜ்யோதி வடிவாகிய நம்மிடத்தினின்றும் சுடர் வடிவாகத் தோன்றினன் அவன்.

அவனுடைய அளவற்ற மஹிமைகளில் லேசாலேசந்தான் அங்கங்கே சிறிது தலைகாட்டுகின்றது.

4. உருத்திர கோடிகள் அளவற்றனவில் இவனே "மஹாஸம்ஹார காரண ருத்திரன்."

5. பஞ்சாயுதந்தரித்த பலகோடி விஷ்ணுக்களில் இவனே "ஸ்ரீ கண்ட ருத்திரக் கடவுளின் சக்தியான மஹாவிஷ்ணு."

6. அவனது நான்கு மூர்த்தங்களி லிவன் வாசுதேவமூர்த்தி.

7. அவனுடைய பத்துப் பிறவிகளில் இவன் ஸ்ரீராமன்.

8. ஆயுதந்தரித்த யாதவர்களில் இவனே வாசுதேவன்.

9. பாண்டவர்களில் இவன் அருச்சுனன்.

10. எல்லாப் பிரஜாபதிகளுக்குள்ளும் இவன் பிரமன்.

11. எல்லா மனுக்களுக்குள்ளு மிவன் சுவாயம்புவமனுவாகும்.

12. எல்லாத் தேவர்களுக்குள்ளும் இவனே இந்திரன்.

13. ஒளியுள்ள பொருள்களில் இவன் அங்கி (அக்னி) தேவன்.

11. பிதிர்க்களில் இவன் யமன்.

14. இராக்ஷதர்களில் இவன் நிருதி யென்னும் * திக்குப்பாலகனவன்.

15. ஜலசரீரிகளில் இவன் வருண தேவன்.

16. பலமுள்ளவர்களில் இவன் வாயு தேவன்.

* முராசுரனுடைய மாபிலுதித்த அக்கினி பக்ஷணன் குமாரன் தீர்ச்சயன் என்பான் பசுபதீசப் பெருமானைப் பூஜித்துப் பேற்றால் நிருதர்க்கெல்லாம் அதிபதியாய் நிருதியென்னும் பேர்பெற்று தென்மேற்குத் திசைக்கு அதிபதியாய் விளங்கினன்.— —கருவூர்ப் புராணம், திக்குப்பாலகர் சருக்கம்.

17. கந்தர்வராகிய பவனலோகத்தாருள் இவன் சித்திரதரன்.

18. திரவியவான்களில் விச்சிரவா முனி குமாரனாகிய குபேரன்.

19. திக்பாலர்களில் எல்லா இன்பங்களையு முதவவல்ல ஈசானன் என்னும் வடகிழக்குத் திசைப் பாலகனுவான்.

20. திக்கஜங்களில் கீழ்திசைதாங்கும் நான்கு கொம்புகளையுடைய ஐராவதம் இவனே.

21. யானைகள் எல்லாவற்றிலும் இவன் பிணி முகன் என்னும் யானை.

22. பலவகைப்பட்ட நதிகளில் கங்கை இவன்.

23. பதினொரு உருத்திரர்களில் சங்கரன் இவன்.

24. எண்வகை வசுக்களுள் பாவகன் என்னும் வசு இவன்.

25. துவாதசாதித்தியர்களில் இவன் விஷ்ணு.

26. வைத்தியர் யாரினும் மேலான அசுவனி தேவர்கள் இவன்.

27. அசுரர்களில் பிரஹலாதன் இவன்.

28. சர்ப்பங்களில் வாசுகி இவன்.

29. பறவைகளில் கருடன் இவன்.

30. மிருகங்களில் சிங்கம் இவன்.

31. குதிரைகளுட் சிறந்த உச்சைசிரவம் இவன்.

32. பசுக்களுட் சிறந்த காமதேனு இவன்.

33. ருஷிகளுள் பிரமருஷியாகிய வசிஷ்டன் இவன்.

34. கிருத்தியங்களுள் அனுக்ரக கிருத்தியம் இவன்.

35. தேவரிஷிகளில் நாரதன் இவன்.

36. ராஜரிஷிகளில் விசுவாமித்ரன் இவன்.

37. வேளாளமுனிவர்களுள் சூதமுனி யென்னும் உரோமகருஷணர் இவன்.

38. அக்னியுட் சிவாக்னி இவன்,

39. அக்ஷரங்களுள் பஞ்சாக்ஷரம் இவன்.

40. மணிகளுள் உருத்திராக்ஷமணி இவன்.

41. மலைகளுள் மேருமலை இவன்.

42. விருக்ஷங்களில் அரசமரம் இவன்.

43. மனிதருள் ப்ரஹ்மஞானம் வாய்ந்த அந்தணர் இவன்.

44. அந்தணருள் ஆதிசைவ ப்ராமணர் இவன்.

45. வித்தைகளுள் பரவித்தை இவன்.

46. தேவமணிகளுள் சிந்தாமணி இவன்.

47. யோகங்களுள் அஷ்டாங்கயோகம் இவன்.

48. மிருகங்களுட் பசுக்கள் இவன்.

49. நவகண்டங்களுள் பரதகண்டம் இவன்.

50. கிரகதேவதைகளுள் வியாழபகவான் இவன்.

51. சாரதிகளுட் பிரமனும் இவன்.

52. குருவடிவங்களுள் தக்ஷிணமூர்த்தி இவன்.

53. மாதங்களுள் ஆவணிமாதம் இவன்.

54. சிவாகமங்களுள் ரௌரவாகமம் இவன்.

55. பொய்கைகளுட் சரவண மிவன்.

56. கடல்களுட் பாற்கடல் இவன்.

57. அறநெறியுட் சத்தியம் இவன்.

58. பருவங்களுள் வஸந்தருது இவன்.

59. மலர்களுள் தாமரை மலர் இவன்.

60. அணிகளுள் மேகலை இவன்.

61. ஞானங்களுட் சிவஞானம் இவன்.

62. ஆச்சிரமங்களுட் சந்நியாஸம் இவன்.

63. சூத்திரங்களுட் சிவஞானபோத மஹா சூத்திரம் இவன்.

64. ரூபங்களில் நிஷ்கள—சகள சௌந்திரிய ரூபம் இவன்.

இப்படி சுப்பிரமணியக் கடவுளின் பரமைசுவர மூர்த்தங்களை புவனேசுவரியாகிய பார்வதி தேவியார்க்குப் பரமசிவன் தெரித்துக்கூறினர். ஹிருதயகுகையாம் தஹராகாசத்தில என்

றம் வசிப்பவரானதால் குஹப்ரஹ்மம் என்று எல்லாராலும் ஆராதிக்கப்படும் குமாரக்கடவுளின் திருவருள் பெற்றார் இப்படியாக எல்லாவற்றினும் மேலான மஹிமைபெற்று பரமைசுவரிய ஸாம்ராஜ்யம் பெற்று குறைவற்ற நிறைவாழ்வெய்துவர் என்பது திண்ணம்.

"I and my Father are one" என்று சொல்லிய கிறிஸ்துநாதரின் அனுபவம் உண்மையானதால் பாசிவமும் குமாரக்கடவுளும் வேறன்று. சிவனே குஹன் : குஹனே சிவன். தஹராகாசமும் பரமாகாசமும் எப்படி வேறுபட்டதாயின்றி ஒன்றேயாகிறதோ, அணுவுக்கணுவாயுள்ளதும் மஹத்துக்கெல்லாம் மஹத்தாயுள்ளதும் எப்படி வேறுப்பட்டதாயின் அனந்தமாயும் ஸத்தியமாயுமுள்ள ப்ரஹ்மமேயாகிறதோ, அப்படி சிவனும் குஹனும் வேறல்ல. அஹமும் புறமும் ஒன்று பட்டாரிடத்தே சிவனே குஹனாகவும், குஹனே சிவனாகவுமிருந்து விளங்கும். "The Immanent and Transcendant God is one only without a second." அஹப்புற மிரண்டினும் அளவிறந்து நிற்கும் கடவுள் ஒன்றே. ஆயினும் குமாரக்கடவுள் கலியுகத்திலும் பிரத்தியக்ஷ ப்ரஹ்மமாதல்பற்றி கலியுகவரதர் என வழங்கப்பெற்றார்.

——:(✱):——

## The Lord of Pazhani's Grace Assured!

### "பழநியாண்டவர் கிருபைசெய்வர்."

——:(✱):——

"தந்தைமலர்க்கைச் செழுங்கனிதன் தமையன்
    தனிர்க்கை தனிற்காணச்
சிந்தை தெளிந்தாண் டொருவியுயர் தேவகிரிச்
    சேவிமம் வைகி—
"சேயதிருவா வினன்குடியிற் சென்றுன் குன்று
    தொறுநின்றான்."

"அந்தர்முக ஸமாராத்தியா பஹிர்முக துர்லபா" என்றுள்ள ரஹஸ்யநாம ஸ்தோத்ரார்த்தப்படி அந்தர்முகத்திலே எல்லாராலும் லகுவாய் ஆராதிக்கப்படத்தக்கவரும் பஹிர்முகப்பட்டவிடத்திலே துர்லபராயிருக்கிறவருமான அத்வைத வஸ்துவாகிய பரம்பொருள் சகளநிஷ்கள வடிவங்கொண்டு பரமசிவனும் தேவியருமாயிருந்து தம் புதல்வர்களாகிய விநாயகக்கடவுளையும் அவருக்கிளையவராகிய சுப்ரமணியக் கடவுளையும் அழைத்து, உங்களிருவரில் யார் எங்களையொரு பிரதக்ஷணம் செய்து முன்வருகிறாரோ அவர்களுக்கு இந்த மாதுளம்பழம் தருவோமென்றுரைக்க, இளையவர் உடனே திருக்கோலங்கொண்டு மயில்வாகனரூடராய் நான் இதோ ஒருநொடியில் ப்ரதக்ஷணம் செய்து வருவேனென்றுரைத்து அப்படியே "எங்கனும் வியாபினீ" யென்று துதிக்கப்பெற்றவரான சிவசக்தி ஸ்வரூபத்தை யறிந்து உலகமெல்லாவற்றையும் ஒரு நொடியில் வலஞ்செய்து திருக்கயிலைமலை வந்தார். அப்படி வலஞ்செய்து வருமுன்னே தானே விநாயகக்கடவுள் எழுந்துநின்று அந்தர்முகமாகித் தன் இதயகமலத்திலேயுள்ள தஹராகாசத்திலே விளங்கியவரான தண்டநீதிஸ்தரும் தஹராகாச ரூபிணியுமாகிய பரசிவந் தேவியாரைப் பிரதக்ஷணஞ் செய்வான் இருந்த இடத்தில் இருந்தபடிதானே தன்னைத்தான் ப்ரதக்ஷிணயாகச் சுற்றித் தம் தந்தை தாயாரைத் தரிசித்து "கனியெங்கே" யென்று கைநீட்டினர். அவர் அந்தர்முகத்திலே தம்மைக்கண்டு சுலபமாய்ப் பிரதக்ஷணம் செய்துவந்து பந்தயம் கவித்துவிட்டாராதலால் மாதுளம்பழம் (மாம்பழம் எனினும் பொருந்தும்) கொடுக்க வாங்கி யெடுத்துக்கொண்டார்.

பஹிர்முக தரிசனம்செய்து ஒரு நொடியில் உலகமெலாம் சுற்றிவந்த குமாரக்கடவுள் தனக்குமுன்னமே விநாயகக்கடவுள் இருந்தவிடம் விட்டுப் பெயராமல்தானே பந்தயம் கவித்தவராய் மாதுளம்பழம் கையில் வைத்திருக்கக் கண்டு பிணக்குற்றார்போல் காட்டி இந்த அந்தர்

முகவித்தை யெனக்கும் தெரியுமென்றுகாட்ட, மயிலைவிடுத்து, மகுடம், குண்டலம், பொன்னுடை முதலிய ஆபரணங்களை யெல்லாங்கழற்றி யெறிந்து, கேதனம், வச்சிரம், அங்குசம், விசிகம், வேல், பங்கஜம், கண்டாமணி, மழு, வில், வாள், தோமரம் என்னும் ஆயுதங்களையும் விசியெறிந்து, தண்டமொன்று கையில் ஏந்தி கௌபீனதாரியாய் திருக்கயிலையினின்றும் புறப்பட்டுத் தென்றிசை நோக்கிச் சென்று தேவகிரியை அடைந்தார். அங்கே தம்மைநோக்கித் தவஞ்செய்த முனிவர் தேவர்களுக்கு வரங்கொடுத்து வைகை நாட்டிலேயுள்ள திருவாவினன்குடிக்குச் சென்று, சிவகிரியமர்ந்து, இலக்ஷ்மி, சூரியன், காமதேனு முதலியோர்க்கு நல்லருள்புரிந்து பற்பல திருவிளையாடல்களைச் செய்திருந்தார். இவர் இங்கே இப்படி அகத்துறவோடு புறத்துறவும்பூண்டு தண்டபாணியாக ஸந்யாசிக் கோலங்கொண்டு திருவிளையாடல் செய்திருக்க, திருக்கயிலையில் உமாதேவியார் தமது செல்வக்குமாரர் உலகை வலம்வந்ததும், விநாயகர் கனிவாங்கியதும், அதனாற் பிணக்குற்று அந்தக் குமாரர் தண்டபாணியாக (ஸந்யாசிக் கோலங்கொண்டு) வெளிப்பட்டதும் அறிந்து, அவரது பிரிவினையைச் சிறிதும் பொறுத்திருக்க ஆற்றாதவராய், இறைவருடன் திருவாவினன்குடிக்குச் சென்றனர். கதிரை வேலாயுதக்கடவுள் தம்மைத் தேடிவந்த தாயையும் தந்தையையும் வணங்கினர்.

நிர்மலராகிய பரமசிவம் உளங்கனிந்து வேதாகமம் ஓதும் திருவாயினாலே இன்சொற்கள் கூறி யெடுத்தணைத்து முதுகைத்தடவி, உச்சிமோந்து, அருகிருந்த பிராட்டியாரைத் திருநோக்கஞ்செய்தார். உமையம்மையார் திருப்புன்முறுவல் கொண்டு,—

"கந்தாவருக! உலகமெலாங் கணத்திற் புடைபோய் வந்தவொருகாரே வருக! மாதுளங்கனிக்குப் பிரிந்
[தோய் வருக! அரும்
எந்தாய்வருக! வேள்வருக! இனியோய்வருக! எவ்வுயிர்க்குமேந்தாவருக! தண்டதரனேறே வருக!
நங்கள்திரு மைந்தாவருக! சிவகிரிநேர் வாழ்வே
[வருக! இன்பமுள
மணியே அணியேவருக! நலம்வந்தாய் வருக!
[அருள் சுரக்கும்
சிந்தேவருக! 'வினன்குடியின் திருவே வருக! வருக
[வே!
தேவே ஞானப்பழநீவா! செல்வா வருகவருகவே!"

என்று வருகைப்பருவம் கூறி வாரியெடுத்துத் தோள்மேலணைத்து மீட்டும் இறைவன் கையிற் கொடுத்தனர்.

பெருமானாரும் வாங்கி மடியினில் வைத்து

"செல்வக் கண்மணியே! நீ யென்றும் இளமையை உடையாய்! எல்லா அறிவுமுள்ளாய்; நீ சிறுவனோ? இல்லை, இல்லை! பெரியோன், கிழவோனன்றோ! மாதுளங்கனியு மொருகனியோ; நீயே யென்றுந் தெவிட்டாப் பேரின்பச் சுவையை இடைவிடாது கொடுக்கும் சிவ ஞானப் பழமாகும்! அங்ஙனமுள்ள பழ(ம்) நீயாகவும் உனக்கு வேறுபழமும் வேண்டுமோ"?

என்று இவ்வாறாகப் பற்பல இனிய மொழிகள் கூறி,—

"மைந்த! யாமும் சத்தியும் நீயேயன்றோ! ('தத்துவமஸி' வாக்கியப்பொருள் நீ யென்றபடி). அது எம்முடைய ஐந்துமுகமும், தேவியின் ஒருமுகமும் சேர்ந்து நினக்கு ஆறு திருமுகங்களாக விருப்பதனால் அறிதி, எம்மைக் குறித்துச் செய்யும் வழிபாடும், நின் அன்னையைக் குறித்துச்செய்யும் பூசனையும் நினக்கே யாகும். எம்மிருவரையும் பூசைசெய்தடையும் பலம் நின்னைப் பூசைசெய்வதாலுண்டாகும். நின்னைப் பூசித்தவர் எம்மிருவரையும் பூசித்தவராகின்றார்" எனத்திருவாய் மலர்ந்து அத்தலத்தில் வீற்றிருந்தனர்.

பரசிவப் பிரபுவும் தேவியாரும் "பழநீ" எனப் புகன்றமையால் அத்தலம் அற்றைநாட் தொடங்கி பழநீ யெனப் பெயர்பெற்றது.

சுவாமிமலை க்ஷேத்திரத்திலே யுள்ள "தகப்பன்சாமி"யாம் எம்பிரான் "சுவாமிநாதன்" என்று பெயர்பெற்று விளங்குதல்போல, "சிவஞானப்பழம் ஆகும்" எம்மாண்டவன் "திருவாவினன் குடி" "சித்தன்வாழ்வு" என்று பேர்பெற்றுள்ள பழநி ஸ்தலத்திலே "பழநியாண்டவன்" எனவும், "தண்டாயுதபாணி" எனவும் பேர் பெற்றுக் கலியுகத்தில் அடியவர்க்குப் பிரத்தியக்ஷமாகி வேண்டின வரங்களைக் கொடுத்துக் காப்பதால், சித்தன் கோலங்கொண்ட கலியுக வரதராய் விளங்கா நிற்கிறார். இதன் உண்மையை

"பலமத ஆகரோதிதம்பகவஇதி, பிந்தஇதி
பிங்கம்பகவஇதி கிமத்ர பச்ய சித்யணவிய
இவே மாதாகா பகவ இத்யானா மங்கைகாம் [இதி"
பிந்தீதி பிங்காபகவஇதி கிமத்ரபச்யவீதி நகிஞ்சந பகவ

"தக்ஷோவாசயம் வைலோமயைத மணிமாகம்
நபோலயல ஏதைய வைகில சோம்யை ஷோணி
ம்க ஏவம் மஹாச் ங்பக்ரோதல்நிஷ்டதி"

என்னும் ஸாமவேத மஹாமந்திரார்த்தத்தில் பரக்கக் காணலாம். (சாந்தோக்கிய உபநிஷத், 6-ம் பரபாடகம், துவாதசகண்டம், 1-2 பார்க்க).

இப்படிப்பட்ட மாட்சிமை தங்கிய சித்தக் கடவுளாம் தண்டபாணிக்குப் பழநி ஸ்தலத்தில் "பாலொடு சந்தந விபூதிகைக்கொண் டபிஷேகாலங்காரஞ் செய்கின்ற தொண்டரைக் கண்டப்பன் "யார்"? என்று வினவ, தொண்டருங் கண்டத்வநியையே சிந்தித்து"யான்" என்றார்." (கண்டத்வனி=மத்யமை வாக்கின் மூலர்).

கலியுக வரதராய் "சித்தன்வாழ்வி" லமர்ந்த எம்மாண்டவரும், "பாலரூபங் கொண்டுவந்து வைபகத்தா ரேசவென்னை வாதும் சூதும் மலியச் செய்து, பொய்யக்கதா ருள்ளிருந்து மெய்யன்புகாட்டிச் சாட்டுகின்ற ஐயன்" தானுய் ஒரு திருவிளையாடல் செய்ய வுன்னி, தண்டபாணியாயிருந்த தானே தூணிலிருந்து தோன்றி யெனைத் தடுத்தாண்டபடித் தமக்கு நித்தம் திருத்தொண்டு செய்யும் "அடியார்க் கடிமையாம்" அன்டரை விளித்து "யான்" என்று சொன்ன நின்னையறிவேன் "துரையப்பா! யார்?" எனத் தம் செம்பவளத் திருவாய்திறந்து இதய கமலத்திருந்தபடி யுசாவிக்கேட்க, அடியவரும் மத்யமை வாக்கைவிட்டுப் பரை, பச்யந்தி யென்னும் வாக்மஹிமையைச் சிந்தித்துச் "சாமிநாதனேன் றுரைசெய்ய"க் கதிர்காம வள்ளலாகிய எம் ஐயன் ஜோதியிலிருந்து சுடர் தோன்றினாற் போலத் தாம் சகள நிஷ்களமிருண்டு மொன்றாயிருந்துவிளங்கும் அற்புதத்தைக் காட்டத் தம் திருக்கரத்திருந்த தண்டத்தை வீசினர். அது தூண்டாவிளக்கொளியாகப் படீரென்று ஜ்வலித்து ஜோதிரூபமாய், "தேவருங்காணுச் சுயஞ்சோதி" தானுய் விளங்கியது.

"தொண்டருமந்தத் தேவருங்காணுச் சுயஞ்சோதி
காணக்கண் கூசியே சித்தம் கலங்கலுற்றார்."

இவ்வதிர்சயச் செய்தியை அவர்தானும் பழநீயானுன் அருளாலே ஆண்டானடிமையாய் சிந்தாமணியைக் காக்க உடன்பட்டு "ஓம்" என்று ஒப்பந்தமிட்ட ஏழையாம் அடிமைக்குக் காவிகித வரப்பிரஸாத மூலமாய்த் தெரிவிக்க, இந்த அடிமையும் ஐயன் இங்கு மங்கு மெங்குமொன்றாயிருந்து "அடிப்பானுமவன் அணைப்பானுமவனுய்ச்" செய்யுங் கூத்தைக் கண்டதிர்சயித்துக் "கலியுகவரதா! காத்தருள்வேலா!" என்று அவன் பெருமையைப் பாடித்துதிக்கலாயினன். பின்னும், பக்காத்திருடர்கள் பட்டணத்துப் பிள்ளையைத் திருடனென்க் காட்டிக் கொடுத்ததுபோலவே, உளநொந்து உடல்நொந்து கட்டிலோடு கட்டிலாய்க் கிடந்த ஏழையைச் சண்டைக்கிழுத்துப் பெண்டாட்டி பிள்ளையென்று பாராமல் வைதடித்து வம்பு துன்பு செய்து காயம்படியச்செய்த வொருநாள்கண்ட

ன் தன்னைப்பிடித்தடித்து வைதுவிட்டதாக நீதி ஸ்தலத்தில் பொய்ப்பிரியாது கொடுத்து இவ் வேழையைச் சந்திக்கிழுத்து வம்பு செய்ததை யெல்லாம்பொறுத்து "தண்டநீதிஸ்தாயைநமஃ" என்று உள்ளதையுள்ளபடி சொல்ல, நீதியதிப ரும் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்தரு ளியஸாத்விகஸாமர்த்திய நிதானத்தையெண்ணி யெண்ணிச் சிந்தை கரைந்துருகி, "தர்ம்மமேக" ரூப யோகவித்திதானே "மேகாத்தாள்" ஸமே த "ஸ்பர்சாம்பிள்ளை" யென்கிற பலிதேவதை யாகத் திருவுருக்கொண்டு தர்மம் தலையெடுக்கத் திருடனொடு முரடனும் தலைசாயப் பலிகொ ண்டு,—

"ஹாஹாதேவீஹாதேவி
ஹரிஹரிதேவீஹரிதேவி
பட்பட்தேவீபடதேவி
சட்சட்தேவீசடதேவி.

யென்றபெரியோர் சொல்லிய கவச ஸ்தோத்தி ரத்துக் குகந்தவளாய், உண்மைக்குறைவிடமாய் நடராஜனை மடியில் வைத்த கோலமாய் மாது ளம் பிஞ்சொன்றை மஹாமேருவாக்கி, லீலைசெ ய்து வேலைவாங்கின விளையாட்டை நினைத்து நினைத்து நினைவழிந்து "ஐயனே காத்தருள்' என்று அபய விண்ணப்பஞ் செய்து கொண்டி ருக்கையில் எம் பழனியாண்டவர் வரப்பிரசா தங் கொடுத்தஞ்சேல் அபயம்! அபயம்! என்று அபய வரத முத்திரைகளைக்காட்டிக் கடிபந்தன கரத்தோடு தண்டபாணியாய் வேல்தாங்கிய மார்புந்தோளுமாய் வீரபத்ரரோடும் தோன்றி திருவருட் பிரஸாதம் சாதித்த திறத்தை யான் என்னென்று சொல்லுவேன்! எதென்றுரைப் பேன்!

"கலியுகந்தனிலுங் கடவுள் பெருமையைக் கரதலாமலகம்போல் காட்டவென்றே வந்தகும ரன்" பெருமையை யென்னென்று சொல்லு வேன்! "சலியாதன்பர் அழைத்தழைத் தழுந் தோறும் நலியாதவரை நயமுடன் காப்பவன்" கருணையை யான் எதென்றுரைப்பேன்! ஏதோ உள்ளம் பொங்கி உவகைபூத்த அவஸரத்தில் அவனது பரமைசுவரிய மஹத்துவத்தில் ஒரு துளியிலும் துளியளவு கண்டதைக்கண்டபடி விண்டேன் தசமதிதன்னில்.

"கொண்டேன் குருபரன் திருவடி தலைமேல்
விண்டேன் தண்டமே கதியென் வெருவலை
தண்டபாணியின் திருவருள் பழுத்தடிமைதன்
கண்டத்வனியினில் விழுந்ததோர் பண்பால்!"

வேறெதுவுங்காணேன். விண்ணு மண்ணு மொன்றாக அவனே யென்கண்முன்னே யஹம் புறமுமொன்றாக நிற்கிறான், நிற்கின்ற கோலம் பாரே!

"ஈசனுருகி மடியினில்வைத் தென்றுமிளையோ யறி [வுடையை
தேசுதருநம்வாணுதற்கண் மணிசிறுவனேபெரியை
வாசநறுமென் கனியுமொரு கனியோ மதுர மொழி [வாயாற்
பேசவரிய மறைஞானப் பிள்ளைபழநீ யெனப்புகன் [றூர்."

"கூறுடை யாளுங்குன்றுக் குணப்பெருங் குன்று [ஞானப்
பேறுடைப் பழநீயென்னப் பெயரது மருவியெங் [கள்
ஆறுமா முகவன்வைகு நகரமு மன்றுதொட்டு
வீறுசொல் பழநியென்றே விளம்பின வுலகமூன்று [ம்."

"பழநீ!"யென்றபொருளைக்கொண்டு பழநியாண்ட [வனேயானுங்!
"பழநீ!"யென்று தெருளக்கண்டு பழநியாண்டவ [னேயானேன்!
பழநியப்பனருளாலையன் மாதுளம் பழமுந்தந்தான்
பழநியப்பன் இருளாலந்தக் கொடியனும்பமக்குட்டி [யென்றான்."

சரவணபவநமோநம
ஓம்தத்ஸத்.

—:(o):—

## "Hamlet Redivivius"-A By-Play.

*(Sequel to "Rediviva—A Drama" by L. C. Innes Esqr. I. C. S. of Sevenoaks, Retired Judge, Madras High Court.)*

### ஹேமலதாநந்தவிக்ரஹம்.

———8(✱)8———

"த்ரிபுரீ த்ரிபுராந்தஸ்தா த்ரிபுராம்ருதபாலிநீ!"

"பின்யோகக்ஷேமத்தைப்பற்றிக் கேட்கவிரும்புகிறேன்"
—பழயொண்டவர்.

அங்கம் I திரிபுரீ.

"சித்சக்திச் சேதநாரூபா ! ஜடசக்தி: ஜடாத்மிகா !
காயத்ரீவ்யாஹ்ருதி: ஸந்தியா! த்விஜவ்ருந்தாநஸேவிதா."

"To Statesman and hero
The splendour of deeds,
And rest to the weary;
And hope to the strong,
For me, O my Master,
The Glory of Song."—*Mrs. Sarojini Naidu.*

### Act I Part V. Cinderella's Prince or "Madness of Gopal."

Motto:—"Great men never copy one another. A master mind cannot be made to fit a pattern or conform to set routine. Every strong man's achievement is an outpouring of himself, of his individual ideas."—*Orison S. Marden.*

"When there is something rotten in the state
The Prince of Demark's ever put on the stage."

"The world makes way for the man with an idea." He is wanted every-where"—*Orison S. Marden.*

பங்கம்–5. "ஹம்ஸராஜன்" அல்லது "கோபாலன் பித்து."

"ஐயுன் செய்யுங் கூத்தென்ன வோ இது அதிர்சயமே!
ஐயன்செய்யு மதிர்சயக்கூத்தென்னவோ இது ஓ!ஓ!"
"நாகேசர் புரமூன்று மெரியச்சுட்ட ஐயனவன்
வீடுமனை வழக்கெடுத்துப் பேசுமழ கென்னேடி!"

"சொல்லியுங் கோளான் சொல்லினுக் கடங்கான்
மெல்லியர்போல் மனமொழிமெய் மாறுவான்
'கோமளிககிருஷ்ணன் கூத்துப்பார்க்கவாரும்சுதரே
யவன் கலிகாலக் கூத்துப்பார்க்க வாரும்."

"ஸம்ஸாரம் ஸாஹாரம் துக்கம்!" என்றார் பெரியோர். துக்கஸாஹாரமாகிய இந்த ஸம்ஸார வியவஹாரத்தில் (wordly affairs) "ஸ்வதா! ஸ்வாஹா!" என்னுமிரண்டு மந்திரங்களைத் தவிர வேறொன்றுக்கு மிடமில்லை. தத்தம் செய்து கொடுத்து திர்ப்திசெய்தல் ஒன்று. பற்றக்கொடுத்துப் பழுதறநிற்றல் ஒன்று. இவ்விரண்டில் முன்னது "தர்ப்பணம்" திருப்தியின் பொருட்டு அர்ப்பணமாகக் கொடுக்கப்படுவது. பின்னது "ஹோமம்" — "ஹம்ஸோஹம்" என்று முக்தியின் பொருட்டு தன்னைப் பசுவாகக்கொண்டு அக்னியில் செய்யும் ஹோமத்தினால் தன்னைத் தியாகமாகக் கொடுத்து பதியம்சமாதல். இப்படி தன்னைக் கொடுக்கப்பெறுவதினால்தான் கடவுளுக்குப் பசுபதியென்று பேர்வந்தது. ஒன்று பிராணதத்தம் மற்றொன்று பிராணத்தியாகம். முன்னதற்குப் பிரதிபலனுண்டு. பின்னதற்கு ஸாயுஜ்யமே பலனுதலால் கொண்டானும் கொடுத்தானும் ஒன்றுவதால் நடுவிலே பிரதிபலனுக்கு இடமில்லை. ஆகையால் ஸ்வதா! என்று பிதிர்யஜ்ஞமும், ஸ்வாஹா, என்று ஈசுவரார்ப்பணமும் செய்ய வேண்டியது.

"பலதானமில்லாத வூர்பாழ்" என்றார் உத்யோக பருவத்திலே உண்மையாளரான நண்பரொருவர். பலதானமாவது கர்மத்தைச்செய்துஅதனால் வரும் கர்மபலனைத் தத்தம்செய்வதாம். தத்தம் செய்தால் பின்னர் தத்தாபகாரம் செய்யக்கூடாது. அது மஹாபாபமாம். கலிகாலத்தில் (in a material age) செய்கர்மமெல்லாம் ஸ்வர்ண பலத்தாலே மதிக்கப்படுகிறது. ஆகையால் பலதானமென்பது ஸ்வர்ணதானத்திற்குப் பிரதிபதமாக உபயோகிக்கப்படுகிறது. அத்வைத பரமான அர்த்தத்தில் கர்மபலத்தியாகத்தால் ஸித்திப்பதாகிய "நைஷ்கர்மஸித்தி" இல்லாத சமஷ்டி ஜீவன் "பாழ்"—அதாவது ஜன்மசாபல்யத்தை யடையாது வியர்த்தமாகும் என்பது அதன் உட்கருத்து. அந்த உண்மைச் சித்தாந்தத்தை அவைதார்த்தம் செய்துகொண்டு 'ஸ்வர்ணதானம்' செய்யாத வூர் பாழ் என்றார் ஸங்கல்ப விகல்பமாயா புருஷனை மன்னுலத்தார். "ஸ்வர்ணம்" என்பது 'ஸு—வர்ண' முடையதாத

லால் அது ஜோதிரூப சுத்தமனஸைக் குறித்தது. அப்படியென்றால் மனப்பூர்த்தியாகக்கொடுப்பது எதுவோ அதுவே ஸ்வர்ணதானம். ஏனெனில் "போதுமென்னு மனமே பொன்செய்யும் மருந்து." இதைவிட வேறு வாதவித்தை கிடையாது. ஆதலால் தான் "ஈதல் அறம்" என்று ஔவையார் மனோதர்மத்தையே தர்மம் என்று கூறினர். ரஸவாதம் என்பது வாதவித்தையில் ஒருபாகம்—ஒரு அங்கம். "ஆபோவா இதம் ஸர்வம்" என்னும் மந்திரப்படி இந்த உலகமெல்லாம் (உலகத்திலுள்ள பொருள்களும் கூடத்தான்) ரஸமயமாயிருக்கிறது ரஸமெல்லாம் ரூபத்தில் (வர்ணத்தில்) ஒடுங்கும். லோகத்தின் ரஸமாத்ரையை க்ரஹித்து ரூபத்தில் ஒடுங்கச் செய்தால் அது வர்ணமயமாகும். அந்த வர்ணமயமான பலபேத வர்ணாத்மக ரூபங்களை ஸ்பர்ச தன்மாத்ரையால் தொட அது வர்ணங்களையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் ஜ்யோதிமயமாகும். ஆதலால் தான் ஸ்பரிசதன் மாத்ரையான சூக்ஷ்மாதிசூக்ஷ்மமான உண்மைக்கு (தத்துவத்துக்கு) பரிசவேதி யென்று பேர் வந்தது. அதை தத்துவஞானிகள் மாத்திரமே உபயோகிக்க வல்லவராதலால் அதற்கு இங்கிலீஷில் "Philoropher's Stone" என்று சொல்கிறதுண்டு. அது தத்துவதரிசனங் கண்டார் உள்ளத்துறை பொருளாய் விளக்கும் "சிந்தாமணி" யன்றி வேறல்ல. பூமியின் உள்ளே குடைந்து பார்த்தால் பொன் வெள்ளி முதலிய நவலோகங்களும், வைரம், வைடூரியம் முதலிய நவமணிகளும் அகப்படுவதுபோல, பக்தியில் முதிர்ந்த யோகிகள் உள்ளத்தைக் குடைந்து பார்த்தால் அங்கே சிந்தாமணி யகப்படும். அகப்படும்=என்றால் அந்தர்முகப்பட்ட அகக்கண்ணுக்கு (ஞானசக்ஷுஸ் என்பர் இதேயே) தரிசனமாகப்படும் என்று பொருள் செய்துகொள்ளல் வேண்டும். இந்த சிந்தாமணியையே "ஜோதிர் மனஸ்" "சுத்தமனஸ்" என்றும் சுருதி (மேவதம்) கூறும். பூஃ சப்தம் ஸ்தூலப்பிரபஞ்ச (தோற்ற)த்தையும், புவஃ சப்தம் சூக்ஷ்மப் பிரபஞ்ச (தோற்ற)த்தையும், ஸுவஃ சப்தம் சுவர்க்கமென்று சொல்லப்படும் காரணப் பிரபஞ்சத்தையும் குறிக்கும். இப்படி த்ரிவிதமான தோற்றங்களை யுடைய பிரபஞ்சத்தை யறிந்து க்ரஹிப்பது த்ரிகரணமாம். இதை "மன, மொழி, மெய்" என்றுரைப்பர். காரணப் பிரபஞ்சமெல்லாம் சுத்தமனத்தி லுதித்து உதித்தவிடத்திலேதானே யொடுங்கும். சூக்ஷ்மப் பிரபஞ்சமெல்லாம் வாக்கிலிருந் துண்டாகி வாக்கில் தானே யொடுங்கும். ஸ்தூலப்பிரபஞ்ச மெல்லாம் உடல் காரணமாக உண்டாகி உடலில் தானே யொடுங்கும். ஆகையால் த்ரிகரண சுத்தியோடு யார் உழைக்கிறார்களோ அவர்களுக்கு மூவுலகிலும் (திரிபுரத்திலும்) ஆகாததொன்றில்லை. தேவரிஷியான நாரதமுனிவர் த்ரிகரண சுத்தி வாய்ந்தவர் என்றுணர்த்தவே அவரைத் த்ரிலோக வாசியென்றும் த்ரிலோக சஞ்சாரியென்றும் புராணங்கள் கூறும். மனம் சுத்தப்பட்டால் (ஹிருதயசுத்தியுண்டானால்) அந்தக்கரணத்திலொடுங்கும். வாக்கு சுத்தப்பட்டால் அது பரை வாக்காகி ஜோதிர் மனஸில் ஒடுங்கும். உடல் சுத்திப்பட்டால் அது நாடிசுத்தி வாதசுத்தியினால் பிராணமயமாகிப் பிராண மூலமான வாயுலிங்கமாகி சிதம்பரத்தில் ஒடுங்கும்.

இப்படியாக மன மொழி மெய்களால் எவர் அஹத்தூய்மை சித்திக்கப்பெற்று ஒழுகுகிறார்களோ அவர் மஹத் என்னும் சப்தத்துக்கு லக்ஷியமாகிறார்கள். ஆகையால் "கோபாலனுக் குப்பித் துப்பிடித்துப் போய்விட்டதுஎல்லாவற்றையும் பொன்னுக்கவேண்டி வாதவித்தைசெய்கிறான்" என்று ஒரு வாக்குப்பிறக்கவும் அது "வாய்மையால் அஹம் தூய்மையான" ஒருவர் உள்ளத்தில் உறைக்கலாயிற்று.* உள்ளத்துறை

*cf. "என்னயமெல்லாம் பொன்னய்மாக்குமோர்
கோபாலகிருஷ்ணன் கூத்துப்பயர்க்கவாரும்சுதரே!"
—ஸ்ரீகோபாலகிருஷ்ணன் கூத்து (V. C. Vol. XIX. P. 46.)

த்தசப்தம் வீணாநாதம்போலும் த்வனியில் ஒடுங்கியது. அநாஹதத்துக்குள்ளே (ஹிருதயகமலத்துக்குள்ளே) ஒரு சப்தமும், அந்த சப்தத்துக்குள்ளே ஒரு த்வனியு மிருக்கிறது என்ற சுருதிவாக்கு மெய்யாயிற்று. வீணாநாதம்போலெழுந்த அந்த த்வனியை நிர்விஷயப்பட்ட தியானயோகஸித்திபெற்ற மனத்தாலே சிந்தையறச் சிந்திக்க அது ஜோதிர்மயமாகி ஜோதி தரிசனம் தந்தது! இந்த வர்ணாசிரம தர்ம விடுதியிலிருந்து வீடுபேறச் சிந்திக்கச் சிந்தை நழுவியவிடத்தில் சிந்தாமணிதரிசனம் கிடைத்தது. அந்தப் பரிசவேதியாம் சிந்தாமணியைக் கைக்கொண்டு கோபாலனைத் தொட்டேன். தொடவும், அவன் பித்தன், பேயன், பாலன்போல் ஆடலுற்றான். "கோபாலனுக்குப் பித்துப்பிடித்துப் போய்விட்டது" என்ற சொல் உண்மையாயிற்று. வாக்குப் பலித்தவிடத்தில் வழக்கும் ஒழிந்தது.

"நித்தியானந்த நிர்மலாகார நிருத்தகிருஷ்ணன்
சாக்ஷியம்மா"!

என்ற மௌனத்திற் பிறந்த வாக்கு லக்ஷியம் பொருந்தலாயிற்று. "கண்டேன் அதிர்சயம்காண்கிலேன் வேறொன்றும்." "உண்டேன் உளச்சோதி உறங்கினேன் துயில்விட்டு."

"வித்தியா னந்த விமலசரீரியா வித்வத்லக்ஷியம் வேண்
[டினேற்கு
[illegible] சாந்த்யவதூத சாக்ஷியாம் தீக்ஷை தந்
[தானே
நித்யமா ஐயன் செய்யும் கூத்தென்னவோஇது!
[அதிர்சயமே!"

என்று கள்ளங்கரைந்த வுள்ள முருகப் பாடினேன், ஆடினேன்! முருகன்செய்த கூத்தென்னவோ! என்று மனம் ஒடுங்கினேன். அநாஹதத்துக்குள்ளே சப்தமும் சப்தத்துக்குள்ளே த்வனியும், தவனியினுள்ளே (ஸர்வவர்ணசோபிதமான) ஜோதியும், ஜோதிக்குள்ளே சிந்தாமணியென்னும் சித்தவிருத்தி நிரோதஸித்திமனமும் இருக்கிறதென்று சொன்ன வேதமே பேதமின்றி அந்தசிந்தாமணியினால் முத்தொழிலும் செய்யலாமென்று கூறிய தன்மையாயிற்று. பித்துப் பிடித்த கோபாலன்கூத்தைப் பார்க்கத் தெரியாத பிதற்றல் வாயாளர்முன் அச்சிந்தாமணியை வைத்தேன், அது அவருக்கு கூழாங்கல்லாகத் தென்பட்டது. "இதென்ன கூழாங்கல்!" என்றார். அதையு மெடுத்துவிட்டெறிந்தேன். எறிந்த மாத்திரத்தில் தானே ஐயன் அஃதோ டென்னையும் அறவுண்டார்.

"நானுண்டு நமனுண்டு தனமுண்டு மனமுண்டு பின்
வானுண்டு வளியுண்டு வழியுண்டு விதியுண்டு முன்
கோனுண்டு குணமுண்டு மனமுண்டு கணமுண்டு
[கைத்
தேனுண்டுதித்திப்புண்டுமதிப்புண்டுகுதிப்புண்டுகூ
டுனுண்ட ஐயன்செய்யும் கூத்தென்னவோஇது!
[அதிர்சயமே!
† பானுண்ட வையன்செய்யு மதிர்சயக் கூத்தென்
[னவோஇது! ஓ! ஓ!"

என்று பாடினே னாடினேன் பரவசப்பட்டாடினேன் பாடினேன்! ஆடல்பாடல் அன்றியேதும் செய்ய வொன்றும் அறிகிலேன் "ஹாம்லெத்" என்னும் நாடகத்தில் ஷேக்ஸ்பியர் மஹாகவி செய்த திருக்கூத்தெல்லாம் ஐயன் செய்யும் பெருங்கூத்தன்றி வேறல்லவென்று வெட்ட வெளிச்சமா யுணர்ந்தேன்! உணர்ந்ததைப் பின்னுமறிந்தேன்! அறிந்ததை அறிவழிந்தனுபவித்திருந்தேன். அனுபவம் முதிரச் சகஜமாய் சாந்தியாதீத கலையினின்றும் வெளிப்பட்டேன். ஒளிப்பட்டேன்: அளிப்பட்டேன்! களிப்பட்டேன் க-ஏ-ஈ-லா-ஹ்ரீ மென்றே! "வாக்பாவ கூடமுகபங்க ஜாஸயநமஃ" என்றுள்ளங்குளிர வாயார உடல் புளகாங்கிக்க வாழ்த்தி யேத்தித் துதித்துக் குதித்தேன். அந்த புவனேசுவரியையும் என்னுள்ளேயே கண்டு * களித்தேன்.

"கண்டேன் கண்டதைக் கண்டபடி நானுரைத்தால்
காணாதைக் கட்டியழும் கண்கெட்ட குருடரெல்லாம்
பேயென்றும்பித்தென்றும் பரிகாசம்செய்கிறார்கள்;
பேயென்றாலென்ன பித்தென்றாலென்ன!
பரம்பொருளெல்லா மொன்றுதானே!"

—ஆனந்தத்தாய்மொழி, வளர்ச்சிப்பருவம், கிளர்ச்சிப் படலம்.

——:-:——

† பானுண்ட=பிராணனையுண்ட.

* *"The force that is going to carry you to your goal is coiled up inside of you*, in your energy, your pluck, your grit, your determination, your originality, your character. It does not exist in another, but lies within you, at your command"—And that in one mystic word is " *Kundalini*.

### "*Honi-Soit-Qui-Mal-y-Pense.*"

### கெடுவான் கேடுநினைப்பான்.

———:(*):———

(ஒரு கதை.)

(159-வது பக்கத்தொடர்ச்சி.)

சென்ற சஞ்சிகையில் தையற்காரன் வலது கண்ணைத்தச்சன் ஒருகவளம் சோற்றைக்கொடுத்துக் கெடுத்துக்விட்டான் என்று சொன்னோமல்லவா? அத் தருணத்தில் தையற்காரனுக்கு அதிக துக்கம் உண்டாயிற்றாயினும், ஒரு நாள் தன் வீட்டிலே புசித்துக்கொண்டிருக்கும் பொழுது "வினைவிதைத்தவன் வினையறுப்பான் தினைவிதைத்தவன் தினையறுப்பான்" என்று தன் தாய்சொல்லிய நீதியை நினைத்துக்கொண்டு துக்கந் தெளிந்தான். பின்பு தன் கண்ணுக்குப் பதிலாக அந்த சண்டாளன் கொடுத்த கொஞ்சம் உணவைப் புசித்தான். புசித்தபிறகு சற்று எழுந்திருக்கச் சக்தி யுண்டாயிற்று. சக்தியுண்டாகவே, ஈசுவரகடாக்ஷத்தால் பார்ப்பதற்கு ஒரு கண்ணாவது மிகுந்திருக்கின்றதல்லவா வென்றெண்ணி மனந்தேறி தனக்கு நேர்ந்த விபத்தை நினையாமல் சந்தோஷமாகவே எழுந்து அப்புறம் போயினான். ஆறாம்நாள்பசி அவனுக்கு மிகவும் அதிகமாயிற்று. தேகத்தைவிட்டு ஜீவன் குதித்தோடிவிடும்போல் அவ்வளவுஆயாஸமாயிருந்தது. அதனால்அன்றுபொழுதுபோவதற்கு முன்னமே ஒரு மரத்தடியேபோய்ப் படுத்துப் பசியால் இராவெல்லாம் தூக்கம் வாராமல் அல்லாடினான். காலையில் அவனுக்கு எழுந்திருக்க சக்தியே இல்லை; அத்தருணங் கண்டு தச்சன், அப்பா உனக்கு மற்றொரு கண்ணைக் கொடுக்க இஷ்டமானால் இந்தவேளையில் உயிரைக் காத்துக்கொள்ளும்படி கொஞ்சம் உணவு கொடுக்கின்றேன் என்றான். அது கேட்டுத் தையற்காரன் இது நாம் முன்செய்த பாவத்தின் பலனே ஒழிய வேறல்ல வென்று நினைத்து உம்முடைய சங்கற்பத்தை மீறி மற்றொன்றும் நடப்பதில்லையென்று சுவாமியைத் தியானித்துக்கொண்டு என் அருமைத் தோழனே, இவ்விடத்தில் இப்பொழுது உனக்கு எதிர் சொல்வார் ஒருவருமில்லை. என் தலைவிதியை அனுபவிக்கநான்சித்தமாய்க்காத்திருக்கிறேன். ஆயின் ஒன்றுமட்டில் உன் இருதயத்தில் உறுதியாயிருக்கவேண்டும்; சர்வேசுவரன் ஒருவன் எல்லாரும் செய்கிற நன்மை தீமைகள் அனைத்தையும் பொதுவாய்ப் பார்த்துக் கொண்டிருக்கிறான்; அவற்றின் பயனை அவரவர் அனுபவிக்கும்படியான காலமும் ஒன்றுவரும். ஆதலால் உனக்கு ஒரு தீங்கும் செய்யாதிருக்கிற என்னிடத்தில் நடத்துகிற இக்கொடிய செய்கைகளுக் கேற்ற தண்டனை நீ அனுபவியாமற் போகமாட்டாய்! என்னுடைய நல்லகாலத்தில் எனக்குக் கிடைத்தவைகளையெல்லாம் நான் உனக்குப் பாதிபங்கிட்டுக் கொடுத்தேனே! அப்படியிருக்க இப்பொழுது உன் இஷ்டம் வேறுவிதமாயிருந்தால் நான் என்னசெய்வேன்! தையல் வேலை என்னுடைய ஜீவனமென்பது உனக்குத் தெரியுமே. கண்போன பிறகு நான் தைத்து பிழைப்பதற்கில்லை; இரந்து தான் வயிறு வளர்க்கவேண்டும். அது என் தலை விதிப்படியிருக்கிறது. ஆயின் ஒன்று உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன். கண்ணைக்கெடுத்து என்னை இந்நடுக்காட்டிலேயே தள்ளிவிட்டு ஓடிப்போகாதே. போய் விடுவாயானால் நான் இங்கேயேதான் அநாதையாய் இறந்து எடுப்பாரற்ற பிணமாய்ப் போகவேண்டும் என்றான்.

கல்லும் கரையும்படி அவ்வெளிய பையன் இவ்வளவுதூரம் பரிதாபமாய்ப் பேசியும் அந்தக் கெடு நெஞ்சனிடத்தில் செவிடன் காதில் சங்கு ஊதினது போலாயிற்று. ஈசுவரன் ஒருவன் ஸர்வசாக்ஷியாயிருக்கிறானென்ற எண்ணம் அவன் இருதயத்தில்உதிக்கவேயில்லை. உடனே அவன் ஒரு கத்தியை எடுத்து அப்பேதை மனிதனுடைய இடதுகண்ணையும் கெடுத்துப்பின்பு

சிறிதளவு உணவு கொடுத்துப் புசிக்கச்செய்து அப்புறம் அவனைக் கோலைக்கொடுத்து அழைத்துக் கொண்டு போனான்.

அன்று மாலைப்பொழுதோடு அப்பெருங்காட்டுவழி மாண்டது. அதைத் தாண்டினவுடனே ஒரு புலத்தில் தூக்குமரமொன்று நாட்டியிருக்கக்கண்டு தச்சன் அந்தக் குருடனைக் கொண்டுபோய் அம்மரத்தடியில் நிறுத்திவிட்டுத்தான் அப்புறம் ஓடிப்போய்விட்டான். ஐயோ பாவம் சிறிதும் கண்தெரியவில்லையே! அந்த அநாதைப்பையன் அங்கிருந்து அப்புறம் எங்கேதான் போகமாட்டுவான்! வழிநடந்து வந்த இளைப்பினாலும் கண்ணைக் குத்தின நோவினாலும் பசியினாலும் நிற்கக் கூடசக்தியில்லாமல் அந்த தூக்குமரத்தடியிலேயே படுத்து உடனே உடம்பு தெரியாமல் தூங்கிப்போனான். காலைவரையில் எழுந்திருக்கவில்லை. சூரியோதயமான பின்பு விழித்துக்கொண்டான். அவனுக்கு அப்பொழுது தானிருக்குமிடம் இன்னதென்று தெரியாது. அந்ததூக்குமரத்தின்மேல் இரண்டு குற்றவாளிகள் கட்டித் தொங்குகின்றனர். அவர்கள் ஒவ்வொருவர் தலையிலும் ஒவ்வொரு காகம் வந்து உட்கார்ந்திருந்தன. அவற்றில் ஒன்று எழுந்து மற்றொன்றைப் பார்த்து, தோழனே உனக்குத் தூக்கம் தெளிந்ததா என்று கேட்டது. அதற்கு அந்தக்காகம் 'உனக்கு முன்னமே நான் விழித்துக் கொண்டிருக்கிறேனென்று சொல்ல, மற்றொன்று, ஆனால் ஒரு செய்தி சொல்லுகிறேன் கேட்கிறாயா: "சென்ற ராத்திரி இந்த தூக்குமரத்தினின்றும் நம்மேல் விழுந்த பனித் துளிகளை கண்தெரிய வேண்டுமென்று தன்மேல் தெளித்துக் கொள்ளுகிற அந்தகனுக்கு உடனே கண்தெரியும். ஆனால்இந்த நுட்பம் ஒருவருக்கும் தெரியாது. தெரிந்தால் இனி நமக்கு கண் கிடைக்கப்போகிறதில்லை யென்று நிராசை செய்துவிட்ட அநேகமாயிரம் குருடர்கள் சுகமாய்க் கண்தெரிந்து வாழ்வார்கள்" என்று சொல்லிற்று.

இந்தப்பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த குருட்டுச் சிறுவன் உடனே தன் மேலாடையை எடுத்துப் பக்கத்திலிருந்த பனித்தரையிலே போட்டு அப்பனிநீர்பட்டு அது நனைந்ததும் அதை எடுத்து அந்நீரால் தன் கண் இமைகளை நன்றாய்த் துடைத்துக் கொண்டான். தீர்க்கதரிசியான காகத்தின் பேச்சு பொய்யாய்ப் போகுமா? உடனே எப்போதும் போல அவனுக்கு கண் தெளிவாய்த் தெரியலாயிற்று. கிழக்கு திசையில் உதயகிரியின்மேல் சூரியன் உதயமாகி வரக்கண்டான்; அவனுக்கு சிறிது தூரத்தில் ஆகாய மளாவிய விசித்திரமான கோபுர மண்டபப் பிராகாரங்களோடு கூடிய மகா நகரமொன்று சூரியகாந்தியினால் தேஜோமயமாய்ப் பளபளவென்று மின்னிக்கொண்டு தோன்றியது; நெடுந்தூரத்து மரங்களிலுள்ள இலை காய் முதலியவைகளும் ஆகாயத்தில் பறக்கின்ற பறவை முதலியவைகளும் அவன் கண்ணுக்கு நன்றாய்த் தெரிந்தன. பின்பு அவன் தன் பையிலிருந்து ஊசி நூலை எடுத்து நூலை ஊசிக்காதில் கோர்க்கப்பார்த்தான். நூலைக்கோப்பதற்குக் கண் கலக்கமின்றி தெரிந்தது. தெரியவே அந்தக்ஷணமே சாஷ்டாங்கமாய்த் தரையிலே வீழ்ந்து நாதனற்ற நடுத்தெருப்பேதையான தன்னை அவ்வளவு கிருபைசெய்து காத்தருளின சுவாமியை வணங்கிப் பலவாறு தோத்திரம் பண்ணினான். பின்பு அந்த தூக்குமரத்திலேயே தொங்குகிற இரண்டு குற்றவாளிகளையும் பார்த்து அவர்களையும் காத்தருளும்படிக் கடவுளை பிரார்த்தித்தான். பிறகு தன்னுடைய காலைக்கடன்களைக் கழித்து, தனக்கு நேர்ந்த துன்பங்களைச் சிறிதும் நினையாமல் மறந்துவிட்டுப் பழையபடியே சந்தோஷமாய்ப் பாடிக்கொண்டு புறப்பட்டான்.

போகும்போது வழியில் முதலிலே ஒருஅழகான குதிரைக்குட்டி அவன் கண்ணுக்குப் புலப்பட்டது. யதேச்சையாய்ப் புலங்களில் திரி

ந்துகொண்டிருந்த அந்தக் குட்டியை இந்த தையற்காரன் பிடரியைப் பிடித்து இழுத்து வந்து அப்பட்டணத்துக்குச் சவாரி செய்து கொண்டுபோம்படி அதன்மேல் ஏறப்பார்த்தான். அதுகண்டு அந்தக் குட்டி அவனைப்பார்த்து, பிள்ளாய், நீ என்மேல் ஏருதே. எனக்கு இன்னும் ஒருவருக்கு வாகனமாம்படியான வயது வரவில்லை. இன்னும் எனக்கு இளமைப் பருவங்கூட மாறவில்லை. ஒருசிறு குழந்தை ஏறி உட்கார்ந்தாலும் என்முதுகு வளைந்து போம்போலிருக்கிறது. தக்க வலிமை வருகிற வரையில் என்னை ஒன்றும் வருத்தாமல் விடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கேற்ற பிரதியுபகாரம் நானும் உனக்கு ஒருசமயத்தில் செய்வேனே யொழிய செய்யாமற் போகமாட்டேன் என்றது.

அதைக்கேட்டு ஜீவகாருணியமுள்ள அந்தச் சிறுவன் அக்குட்டியினிடத்தில் மனம் இரங்கி, நீ இன்னும் விளையாட்டிலேயே கண்ணாயிருக்கிறாய்! ஓடிப்போவென்று சொல்லி விட்டுவிட்டான். விட்டவுடனே அது நாலுகால் பாய்ச்சலாய் நெடுந்தூரம் ஓடிவிட்டது.

முதனாள் காலைமுதல் அந்த தையல்காரனுக்கு ஆகாரம் ஒன்றுமில்லாமையால் இளைப்பு அதிகமாயிற்று. அதனால் அவன் இப்பொழுது நமக்குக் கண்நன்ருய்த் தெரிகிறதென்பது பொய்தான்; வயிறு வாடுகிறதே! இதற்கு என்ன செய்கிறது. இனி நம்மெதிரில் எதுவந்தாலும் அதைப் பிடித்துத்தின்று பசியை தணித்துக் கொள்ளுவதே சரியென்று தீர்மானித்துக் கொண்டு அப்புறம் போனான். அங்கே கருடப்பக்ஷி யொன்று தரையில் நடந்துவந்தது, இவன் மெல்லப்போய் அதைப் பிடித்துக் கொண்டு ஓ பறவையே! துள்ளிப்போகாதே; நீ புசிக்கத்தக்கவனே அல்லவோ எனக்குத் தெரியாது. ஆயினும் பசி பாவமறியாதாதலால் உன்னை விட்டுவிட எனக்கு மனம் வரவில்லை. உன்னைப் பதமாக்கிப் புசித்து விடுகிறேன் என்ருன். அதைக்கேட்டுப் பக்ஷியானது பிள்ளாய் நீ அப்படிச்செய்யலாகாது. நான் ஒரு தேவபக்ஷி; இவ்வுலகில் எனக்குத் தீங்கு நினைப்பார் ஒருவருமில்லை. மேலும் என்னால் மனிதர்க்கு மிகுந்த நன்மையுண்டாகிறது. அதனால் நீ என்னைத் தொந்தரைசெய்யாமல் விட்டுவிடு. சமயம் நேர்ந்தபொழுது இதற்கேற்ற உபகாரம் நான் உனக்குச் செய்யாமல் போகமாட்டேன் என்றது. அதைக்கேட்டு அந்தச் சிறுவன் ஆனால் நீ ஓடிப்போ என்ருன். உடனே அது பறந்து போய்விட்டது பிறகு தையற்காரன் இந்த அற்பப்பறவையால் நமக்கு என்ன நன்மை உண்டாகப்போகிறது? மேலும் இப்பவோ இரண்டொரு நிமிஷத்தில் நமக்குப் பிராணன் போய்விடும் போலிருக்கிறதே! இனி நாம் எதிரில் எதுவந்தாலும் அதை விடாமல் பிடித்துத்தின்பதே காரியமென்று தீர்மானித்துக்கொண்டு போனான். அருகாமையில ஒரு குளத்தில் இரண்டு வாத்துக்குஞ்சுகள் நீந்திக் கொண்டு இருந்தன. அதைக்கண்டு தையற்காரன் இன்று கடவுள் உங்களையா உணவாக அளித்தார் என்று சொல்லிக்கொண்டு அவற்றுள் ஒன்றை முறிக்கப்போனான். அதுகண்டு அண்டையில் சம்பங்காண்டை மறைந்திருந்த தாய்வாத்துக் கூக்குரலிட்டுக்கொண்டு ஓடிவந்து ஐயா என் குழந்தையைக் கொல்லாமல் விட்டுவிட வேண்டுகிறேன். உன்னை ஒருவன் பிடித்துக்கொண்டு போய்க் கொல்லப்பார்த்தால் உன் தாய்க்கு எப்படியிருக்கும். அப்படித்தானே எல்லாருக்குமென்று சொல்லிற்று. அதைக்கேட்டு அந்த ஈரநெஞ்சுள்ள இளைஞன் வீணே ஏன் வருத்தப்படுகிருய்? இதோ உன் குழந்தையை விட்டுவிடுகிறேனென்று சொல்லி அதைத் தண்ணீரில் விட்டுவிட்டான்.

(இன்னும் வரும்.)

——:(υ):——

## The Law of Life alone Conquers.

தருமமே தலைகாக்கும்.

"ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்."—சுருதி.

———:(*):———

(156-வது பக்கத்தொடர்ச்சி.)

சென்ற சஞ்சிகையில் விதூஷகன் நகைப்பெட்டியை நினைத்துக்கொண்டு சாருதத்தனிடம் தான் நடுராத்திரியில் பூஷணப்பெட்டியை கொடுத்ததாகச் சொன்னேமல்லவா? விதூஷகன் சொன்னதை சாருதத்தன் கேட்டு அதன் உண்மை இத்தன்மையதென்று உணரமாட்டாமல், மறுபடி வீடுமுழுவதும் தேடினன்; அந்த உடைமைப் பெட்டி எங்கும் அகப்படவில்லை. அதனால் திருடன் கொண்டுபோயினனென நிச்சயித்து, 'நல்லகாலம். வந்த திருடனது வருத்தம் வீண்போகாமல் இந்த பூணரப்பெட்டியாவது அவனுக்கு கிடைத்ததே' யென்று சொல்லிச் சந்தோஷித்தான். அது கண்டு விதூஷகன்; 'இதென்ன நீ கடைத்தேங்காயையெடுத்து வழிப்பிள்ளையார்க்கு உடைத்து ஆநந்தப் படுகின்றாய்; நம்மிடத்தில் அடைக்கலமாக வைத்த அந்த உடைமைகளை மறுத்தும் வசந்த சேனைக்குக் கொடுக்கவேண்டுவதில்லையென நினைத்தாயோ' வென்று கேட்க சாருதத்தன் ஒன்றும் தோன்றாமல் மயங்கிப் போயினான். பிறகு சற்று நிதானித்து யோஜித்து, ஆ, விதியை மதியால் வெல்லக்கூடாதென்ற உலக வசனம் நம்மிடத்திலேதான் உண்மையாக விளங்கியது; நமது பொருள் அனைத்தையும் அபகரித்துக்கொண்டுபோன கொடிய தெய்வம் அவ்வளவோடு ஒழியாமல் பெயரையும் புகழையும் அழிக்கத் தொடங்கியதன்றோ? வறுமையின் கொடுமை நமது வாய்மொழி எங்குஞ் செல்லாதாகையால், உண்மையை நாம் எவ்வாறு எடுத்துரைத்தாலும், அடைக்கலப் பொருளை ஒளித்துவைத்துக்கொண்டு இல்லை யென்று இயம்புவதா யெண்ணுவார்களே யன்றிக் கள்வன் கொண்டுபோயினனென்று நாம் உரைப்பதை ஒருவரும் மதியார்களே; இதற்குச் செய்யவேண்டிய உபாயமென்னவென்று சிந்தித்துக் கொண்டிருந்தான்.

இதற்குள் ரதனிகை சாருதத்தன் மனைவியான தூதையென்பவளிடம் சென்று நடந்த வரலாற்றைக் கூறினள். அதுகேட்டு அவள் விசனமுற்று, "பட்டகாலிலே படும், கெட்ட குடியே கெடும்" என்ற விதமாய் முதலிலே சிறிதளவு சறுக்கி வறுமைவந்து சேர்ந்த நமது குடும்பத்தில் ஒன்றின்மேலொன்றாய் இடுக்கண்கள் உண்டாகத் தலைப்பட்டனவே; அவற்றினும் இத்தன்மை யான அபகீர்த்திக்கு ஆளாவதைவிடக் கொடியது வேறொன்றில்லை! "வசையொழிய வாழ்வாரே வாழ்வார்" என்றல்லவோ கூறியிருக்கின்றனர். உலகத்தில் ஒப்புயர் வில்லாத புகழ்படைத்து வாழ்ந்த நமது கணவனுக்கு இனிநல்லகாலம் எப்படிவரப் போகின்றது? விதிப்பயனாகி வந்த இந்த அபகீர்த்தி நீங்கும் உபாய மென்னவென்ற ஆலோசித்துச் சிந்திக்கலானாள். தாய் வீட்டிலிருந்து வந்த சிறந்த நவமணி மாலையொன்று தன்னிடமிருப்பது நினைவு வந்து, அதை வசந்தசேனைக்குக் கொடுத்துக் கடன்தீர்த்துக் கொள்ளலாமென நிச்சயித்து, இன்னபடியென்று உண்மையை உரைத்தால் ஒருவேளை அதைக் கைக்கொள்ளக் கருதாரோ என்னவோவென்று சந்தேகங்கொண்டு மைத்திரேயனை அழைத்துவரும்படி வேலைக்காரிக்குக் கட்டளையிட்டனுப்பினள்.

இதற்குள் காலைப்பொழுதாகி விட்டது. பொழுதுவிடிந்த வுடனே மைத்திரேயன் வேலைக்காரி வந்து உரைத்தபடி தூதையினிடம் செல்ல, அவனைக் கண்டு அவள் அடிபணிந்து ஐயா, நான் ஒரு நோன்பு நோற்றுவருகிறேன். அதற்காக நான், இந்த மணிமாலையை உமக்கு நான் தானஞ்செய்யத் தீர்மானித்திருக்கிறேன்; நீர் இதை ஏற்றுக்கொண்டு எனது நோன்பை நிறைவேற்ற வேண்டுமென்று மிகவும் வினய

மாக வேண்டினுள். அவன் அதுகேட்டு அதிக சந்தோஷமாய் அதை யேற்றுக்கொண்டு அவளை ஆசிர்வதித்து சாருதத்தனிடம் சென்ருன்.

சாருதத்தன் அந்த நவமணி மாலையை நோக்கி, அதைக் கொடுத்தனுப்பிய தனமனையாட்டியினது கருத்து இன்னதெனத் தெரிந்து பெண்கள் பொருள் கொடுத்தனுப்பி கடன்தீர்த்து வைக்கும் படியான காலம் நமக்கு நேர்ந்துவிட்டதல்லவா? இதென்ன விதிப்பயன்! என்று நெஞ்சம் புண்ணுகி நின்ருன். ஆயினும் மக்கள் முதலியோர் தம்மவரே யாதலால் அவர்கள் உடைமையும் தம் முடமையேயன்றி வேறல்லவெனத் தேர்ந்து தைரியங் கொண்டவனுகி, நண்பனை நோக்கி, கேசனே, நீ இந்த நிமிஷமே, இந்த நவமணி மாலையை எடுத்துக்கொண்டு வசந்தசேனையினிடம் சென்று, நீ நம்மிடத்தில் வைத்திருந்த உடைமைகளை நமக்குச் சொந்தமெனவே நினைத்து நாம் சொக்கட்டானுடிப் பந்தயம் வைத்துத் தோற்றுப்போயினேம்; அவற்றிற்கு ஈடாக நீ இந்த நகையை வைத்துக்கொள்ள வேண்டும், என்று நான் சொன்னதாகச் சொல்லி கொடுத்து வரவேண்டும் என்ருன். அதுகேட்டு மைத்திரேயன் அப்படியே ஆகட்டுமென்று விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான். பிறகு சாருதத்தன் வீட்டில் திருடன் வந்த செய்தி ஒருவர்க்கும் தெரியக் கூடாதென்று, உடனே வேலைக்காரனை வரவழைத்துத்தக்ஷணமே கன்னவாயிலை அடைத்துவிட்டு மறுவேலை பார்க்க வேண்டுமென்று திட்டஞ்செய்து, தான் அண்டையிலிருந்தே அவ்வாறே செய்வித்துவிட்டு, நீராடி காலைக்கடனை முடித்துக் கொண்டு வரும்படி தடாகத்திற்குச் சென்ருன்.

அவ்வீட்டிலே ராத்திரி களவு செய்த சர்வலிகன், வசந்த சேனையின் வீட்டிலே வேலைக்காரியாயிருக்கும் மதனகையைத் தான் மீட்டுக்கொண்டு விவாகஞ்செய்துகொள்ள வேண்டுமென வெகுநாளாக விருப்பம் கொண்டிருந்தான். அதற்கு அன்று வரையில் அவன் கையில் பொருள் கிட்டாமலே இருந்தது. அன்றையதினம் உயர்ந்த நகைகள் அதிகமாய் அகப்படவே, அவற்றைக் கெட்டவழியில் வீணுக செலவு செய்யாமல், கலியாண விஷயத்தில் உபயோகப்படுத்துவது உசிதமென்று நினைத்து, அவைகளை எடுத்துக்கொண்டு அவன் வசந்தசேனையின் வீட்டிலிருந்த மதனிகையின் கையிலே கொடுத்தான். அவள் அந்த நகைகளை நிதானித்துப் பார்த்து இந்த உடைமைகளெல்லாம் முன்னமே நான் பார்த்திருப்பவை போலிருக்கின்றன; இவை ஏது? உமக்கு எங்கிருந்து கிடைத்தனவென்று கேட்க, அவன் "அதை பற்றி உனக்கென்ன? நான் கொண்டுவந்து கொடுத்தால் வாங்கிக்கொள்வதைவிட்டு விசாரம் செய்வானேன்" என்ருன். அந்தப்பேச்சு அவள் மனதில் நறுக்கென்று உறுத்தியது. அதனுல் அவள் நான் அவ்வளவு நம்பிக்கைக்கு பாத்திரமல்லவெனத் தோன்றினுல், என் மேல் ஆசை வைப்பதிற் பயனென்ன! வேண்டாமென்று முகங்கடுத்துப் பேசினுள். அது கேட்டு அவன், அப்படியெல்லாம் நீ வேறுவிதமாக நினைக்க வேண்டாம்; அதைச்சொல்லி யாகவேண்டிய காரியமில்லையே யென நினைத்தேனே யல்லது மற்றபடியல்ல. இது நான் நேற்று ராத்திரி ஒரு வீட்டில் திருடிக்கொண்டு வந்தது. காலையிலே விசாரித்ததில் சாருதத்தன் வீடென்ருர்கள் என்று உரைத்தான்.

அதைக்கேட்ட வுடனே திடீரென்று மதனிகை மூர்ச்சை யடைந்தாள். அப்பொழுது மறைவாக நின்று அவர்கள் பேசுவதை உற்றுக்கேட்டுக்கொண்டிருந்த வசந்தசேனையும் சாருதத்தனென்ற சொல்கேட்டவுடனே மதிமயங்கி மூர்ச்சித்து நின்ருள். அதைக்கண்டு சர்வலிகன் இதென்ன விபரீதமென்று அச்சங்கொண்டு, மதனிகையைச் சற்று ஆசுவாசப்படுத்தி, மதனிகே நீ பேசிக்கொண்டிருக்கையில் மூர்ச்சை

கொண்டது என்ன காரணமென்று கேட்க, அவள் "அது அப்புறம் ஆகட்டும்,

'ஸாஹஸச்செயல் செய்யத்துணிந்த தீரனே" நீர் கொள்ளையிடப் போன வீட்டில் யாரையாவது துன்பப் படுத்தினீரா" வென்றாள். அதற்கவன் என் சுபாவம் தெரியவில்லையோனும்; தூங்குகிறவர்களையாயினும், பயந்தவர்களையாயினும், பெண்களையாயினும் பாலகர்களையாயினும் நான் ஒருபோதும் துன்பப்படுத்துகிறவனல்லவென்பது இதுவரையில் உனக்குத் தெரியாதோ? அந்த வீட்டில் எவர்க்கும் எவ்விதமான தீங்கும் செய்யவில்லை; சத்தியமாய்ச் சொல்லுகிறேனென்றான்.

அந்த பட்டுப் நீ என் வயற்றில் பால் வார்த்தாய், நான் பிழைத்தேன் என்று மதனிகை மனங்குளிர்ந்து கூறியதுகேட்டு அவன் இதென்ன, நீ இவ்விஷயத்தில் இத்தனை ஆவலுள்ளவளாயிருக்கிறாயே உனக்கும் அவனுக்கும் ஏதாவது சம்பந்தமுண்டோ வென்று வினவ, அவள், அதன் வரலாறுகளை ஆதியோடந்தமாய் அவனுடன் எடுத்துக் கூறினாள். சார்வலிகன் இதைக்கேட்டு நடுநடுங்கி, ஐயோ நான் இத்தீச்செயல் செய்து வீண் பழிக்கு ஆளானேனே; வெயிலுக்கு ஒதுங்க வேணடுமென்று வந்த மரத்தின் கிளையையே வெட்டிவிடத் துணிந்தேனே! இதற்கு நான் இனிச்செய்ய வேண்டிய பரிகாரம் என்னவென்று விசாரமுற்றான். அதற்கு மதனிகை போனது போயிற்று, இனி அதற்காக விசாரப்படுகிறவன் பித்தனல்லவா. இப்பொழுது எனக்கு ஒரு உபாயம் தோன்றுகிறது. சாருதத்தனே கொடுத்தனுப்பியதாகச் சொல்லி இவைகளை நீர் அவருடைய சேவகன் போலவே என் எஜமானியிடம் கொண்டுபோய்க்கொடுத்து விடுவது உத்தமமானதென நினைக்கின்றேன் என்றாள். அவ்வாறு கொடுத்து விட்டால் என்ன செய்தது போலாகிறதென்று சர்வலிகன் கேட்க, மதனிகை நீயும் திருடனாகிறதில்லை; சாருதத்தனும் அடைக்கலப் பொருளை ஒப்புவித்து விட்டவனாகிறான்; சொத்துக் காரரிடம் சொத்தும் சேர்ந்து விடுகிறது என, நீ சொன்னதே சரியான யோசனை அவ்வண்ணமே செய்யவேண்டுமென்று சர்வலிகன் சந்தோஷமாய் அங்கீகரித்தான்.

பின்பு மதனிகை அவனைச்சற்று அங்கேயே இருக்கச்செய்து வசந்தசேனையினிடஞ் சென்று, சாருதத்தனிடமிருந்து காண்பதற்கு ஒருவர் வந்திருக்கிறாரென்று தெரிவித்து அவளது அனுமதியின் மேல் சர்வலிகனை அவளிடம் அழைத்துக்கொண்டு போனாள். கீழே நடந்த வர்த்தமானங்களையெல்லாம் வசந்தசேனை ஒன்றுகூட விடாமல் கேட்டுக் கொண்டிருந்தாளாதலால் அவர்களுடைய உட்கருத்து யாவும் அவளுக்கு நன்றாய்த்தெரியும். சர்வலிகனைக் கண்டவுடனே வசந்தசேனை அவனுக்கு ஆசனமளித்து வந்தனஞ்செய்ய, அவனும் அவளை ஆசிர்வதித்து, தமது வீடுபத்திரமான விடமாயிருக்கவில்லையென்று இதை உன்னிடம் கொடுத்துவிட்டு வரும்படி அனுப்பினாரென்று சொல்லித் தான்கொண்டுபோன நகைகளை அவளிடம் கொடுத்தான்.

வசந்தசேனை தான் ஒன்றும் அறியாதவள் போலவே அதைக் கையில் வாங்கிக்கொண்டு மதனிகையை கையில் பிடித்து, நீர் இந்தப் பெண்ணை பரிக்கிரகிக்க வேண்டும்; இந்த நகைகளை உன்னிடம் யார், கொண்டுவந்து கொடுக்கிறாரோ அவருக்கு இந்தக் கன்னிகையைக் கொடுத்துவிடு என்று சாருதத்தன் என்னிடம் சொல்லியிருக்கிறார். ஆகையால் அவரே இவளை உமக்கு கொடுத்ததாய் நினைத்துப் பரிக்கிரகிக்க வேண்டும் என, சர்வலிகன் ஓகோ, நாம் பேசினதெல்லாம் இவள் கேட்டுக் கொண்டிருந்ததுபோலக் காண்கிறது. என்று மனதில் எண்ணிக்கொண்டு, வசந்தசேனாய், உன் இஷ்டத்திற்கு நான் எதிர்மொழி சொல்லுவ

னன்று, அப்படியே அங்கீகரிக்கிறேனென்ருன். அது கேட்டு அவள் மிகுந்த சந்தோஷத்துடனே அவன் கொடுத்த நகைகளைத் தன்னிடம் வைத்துக்கொண்டு, வேண்டிய வண்ணம் வரிசைகளோடு மதனிகையை சர்வலிகனுடனே தன் வண்டியிலேற்றி அவன் வீட்டிற்கு அனுப்பி விட்டாள்.

வசந்தசேனையின் வீட்டினின்றும் இவ்வாறு சர்வலிகன் வெளியே சென்ற பிறகு, நவமணி மாலையைக் கொடுத்து வரும்படி சாருதத்தன் அனுப்பிய மைத்திரேயன் அவ்வீட்டிற்குப் போயினன். அவன்வருவதைப் பார்த்து வேலைக்காரி வசந்தசேனைக்குத் தெரிவிக்க, அவள், இன்று நமக்குச் சுதினமாயிற்று நமது வீடு முழுமையும் அவருக்கு, நன்ருய் காட்டித் தோட்டத்திற்கு அழைத்துக் கொண்டுவா என்று கட்டளையிட்டாள். அப்படியே அவள் எட்டு அங்கணமுள்ளதாய் வெகு விசித்திரமான காட்சிப்பொருள்கள் அமைந்த அவ்வீட்டினழகை அவனுக்கு காட்டிக்கொண்டே அழைத்துக் கொண்டுபோனுள். இதென்ன குபேரனுடைய கிருகமோ தேவந்திரனுடைய பவனமோ வென்று அந்த வீட்டினழகு அனைவரும் அதிசயிக்க தக்கதாயிருந்தது. அங்குள்ள சித்திரவிசித்திரமான விநோதங்களைப் பார்த்து வியந்து கொண்டே மைத்திரேயன் வசந்தசேனையிருக்கு மிடமான உத்தியான வனத்திற்குச் சென்ருன் பலவகை பூஞ்செடிகளும் பழச்செடிகளும் நிறைந்து விநோதக்காட்சியளித்து திவ்விய கந்தம் வீசும் அவ்வனத்தின் அழகைக் கண்ணெடுத்துப் பார்த்து ஆ! இதை இப்படிப்பட்டதென்று வர்ணிக்க யார்தரம்! இத்தன்மை விநோதமான காட்சிகூட உலகிலிருக்கின்றதோ என்று மிகவும் ஆச்சரியப் பட்டவனுகி வசந்தசேனை யிருக்குமிடத்திற்குச் சென்ருன்.

(இன்னும் வரும்)

———:(•):———

## Sri Krishna's Birthday.
### ஜன்மாஷ்டமி.

———:-:———

இன்றைக்கு ஜன்மாஷ்டமி. அதாவது ஸ்ரீ கிருஷ்ணபகவான் யாதவ குலத்திலே அவதாரம் செய்த நாள். இதற்கு கோகுலாஷ்டமி யென்றும் பேர். கோகுலம்=(தர்மமாகிய) பசுக்களை (க்காப்பார்) குலம். தர்ம ரக்ஷணார்த்தம் பகவான் அவதரித்தாராதலால் கோபாலகிருஷ்ணன் எனப்பேர்பெற்ருர். அவந்திதேசத்தின் தலை நகராகிய உஜ்ஜினி (Ujain) நகரத்திலே சந்திரசேநன் என்னும் அரசன் மனுநீதி தவருது அரசாண்டு வந்தான். அவன் நீலகண்டராகிய மாகாளேசுரப் பெருமானை உபாசித்து மெய்யன்புடன் பூஜைசெய்து வந்தான். அப்பூஜாபல விசேஷத்தால் மணிபத்திரர் என்னும் சிவகணத் தலைவரால் சிந்தாமணி யென்னும் திருக்கைலையிலுள்ள தேவமணி ஈசுவர கடாக்ஷமாக அவனுக்குக் கிடைத்தது. அதை அவன் அன்புடன் வாங்கித் தரித்திருந்தான். இது கேட்ட இதர அரசரும் அதைத் தரிக்க விரும்பி அவனுக்குத் தூது விடுத்தனர். உள்ளன்போடு தபவலியற்றி ஹிருதயசுத்தி வாய்ந்தவர்களுக்கே ஈசுவர கடாக்ஷமாய்க் கிடைக்கும் அச்சிந்தாமணியை மணிமகுடம் தரித்தமன்னரெல்லாம் தரிக்க வாசைப்பட்டால் கிட்டுமோ? கிட்டாது! ஆதலால் சந்திரசேந ராஜன் தன்னிடம் தூதனுப்பிய அரசர்களுக்கெல்லாம் அந்த சிந்தாமணியை அவன் கொடுப்பது கூடாமையென்றும் தன் புஜ வலிமையும் வாக்களும் அழிந்த பின்னர்தான் கொடுப்பதுண்மையென்றும் அறிவித்தனுப்பினன்.

தபவிலாச் செருக்கர்களான அரசர்கள் அவன் தபோபலவலியை யுணரமாட்டாது அவனிடத்துப் பொருமை கொண்டு யாவரும் ஒன்று சேர்ந்து, படையெடுத்துவந்தார்கள். விசுவாமித்திரராஜன் வசிஷ்டரிடமிருந்து காமதேனுவை வேண்டி துராசைப்பட்டு தூர்த்தச் சண்டையிட்டுத் திண்டாடினதை யவர்கள் வாசித்தறிந்தும் உண்மை யறிவில்லாமையால் அதன் உண்மைக்கருத்தை யுணர்ந்தார்களில்லை. சந்திரசேந ராஜனே இவர்கள் படைவலிக்குச் சிறிதும் அஞ்சினனில்லை. பகைவர்கள் திரண்டு மதிலை வளைத்தார்களென்று கேள்விப்பட்டும்

அரசன் சிறிதும் அஞ்சா நெஞ்சினனாய் அவர்கள் படையையும் படைவலியையும் லக்ஷியம் செய்யாது பூஜைத்திரவியங்களை யெல்லாங் கொண்டு (அந்தர்முகத்தியானபரனாகி) மாகாளேசுரப் பெருமானைப் பூசித்துத் தியானித்திருந்தான்.

"யதாராஜா ததாப்பிரஜா" என்பது மூதோர் முதுமொழி. அது போலவே யன்று அரசன் பூஜையிலிருக்கையில், இடையர் குலத்திற் சிறந்த கற்புடை மகளொருத்தி தன் மைந்தனுடன் சிவபெருமானைத் தரிசித்து வந்தாள். அவளுடைய புத்திரன் சந்திரசேகர மஹாராஜன் கோயிலில் பூஜை செய்திருந்த படியே தானும் பூஜிக்க நினைத்து, மறுநாள் மணலாற் சிவலிங்கஞ்செய்து பச்சிலைகளை பூஜாத்திரவியங்களாகப் பாவித்து பரசிவன் திருவடியைத் தியானித்து அசைவற விருந்தான். அழுக்குறு அவன் தூயமனதால் தியானிக்கவும் பகவான் எளியார்க் கெளியனாதலால் அவன் உள்ளத்திலிருந்துதித்து அவன் ஞானக்கண் முன் தோன்ற நிற்ப, அச்சிறுவனும் அந்த திவ்ய தரிசனத்திலீடுபட்டவனாய்த் தியான சமாதியிலிருந்துவிட்டான். பொழுது போனது தெரியவில்லை. அவன் தாய் வந்து உணவருந்த வேண்டி அவனை உசாவி யழைத்தாள். அவன் வாராதது கண்டு அவனிருப்பிடம் வந்து பார்க்கப் பிள்ளையாண்டான் பூஜை விளையாட்டிலிருக்கக் கண்டாள். உண்மை யறியாப் பேதையான அந்த உத்தமி குழந்தை யுணவின்றி யிருப்பது பொறாமல் அவனை வருந்தியழைத்தாள். அதற்குமவன் தியானசமாதி கலையவில்லையால் கடுஞ்சினங்கொண்டு அவன் விளையாட்டைக் கலைத்தாள். கலைத்தும் அவன் சமாதி கலையாதிருக்க வெறுமனே வீடு சென்றாள். இடைச்சிறுவன் கண்விழித்துப் பார்க்கவும் தான் அன்போடமைத்த சிவலிங்கம் உருக்குலைந்திருக்கக் கண்டு மனம்வருந்தி உணவுகொள்ளாமற் சோர்ந்துமூர்ச்சையாயினான். அந்த மூர்ச்சையான அவஸ்தையில்தானே அவன் மனந்தெளிந்து பார்க்க அவ்விடம் துரிய ஸ்தானமாக விருந்தது. அந்த துரியஸ்தானத்தில் சிவலிங்க பெருமானும் சோதி வடிவமாய் விளங்குவது கண்டு அதிசயித்தான் பெருமான் திருவருளை வியந்து மீட்டும் பூஜித்தான். வீடுசென்ற இடைச்சி நித்திரை செய்து விழித்துப்பார்க்கவே தன் வீடு முற்றும் பொன்மயமாக விளங்குவது கண்டு மனங்களித்து, நன்மகவைப் பெற்றேனென்று மகனைப் புகழ்ந்து, நடந்ததை யெல்லாம் அரசனுக் கறிவிப்பேனென்று சென்று தெரிவித்தாள். அரசனும் மந்திரிமார்களுடன் பரிவாரங்கள் புடைசூழ படைக்கோலத்தோடு சென்று கோயிலை வலம்வந்து சிவலிங்கப் பெருமானையும் தரிசித்துப், பொன்மயமாயிலங்கும் மனையையும் பார்த்துக் கரையிறந்த ஆனந்தமுற்று நின்றனர்.

"என்னயமெல்லாம் பொன்னயமாக்கும்
கோபாலகிருஷ்ணன் கூத்துப்பார்க்கவாரும்
சுந்தரே!"

என்றது மெய்யாக அமர்ந்தது.

படையெடுத்து வந்த அரசர்கள் யாவரும் இவ்வற்புதங்களை யெல்லாங் கேட்டறிந்து அஞ்சி, சந்திரசேகரராஜனைவந்து வணங்கிச் சனிப்பிரதோஷத்திற் பூஜித்துப் பேருள் பெற்ற ஸ்ரீகரன் என்னும் அப்பிள்ளையைப் புகழ்ந்து வணங்கி நின்றார்.

அத்தருணம் நவவியாகரண பண்டிதரெனப் பேர்பெற்ற அஞ்சனை குமாரராகிய ஆஞ்சநேயர் அவ்விடம் வந்தார். யாவரும் வணங்கினர். ஆஞ்சநேயர் ஸ்ரீகரனை யெடுத்தணைத்து உச்சிமோந்து, பிரம விஷ்ணுக்கள் முதலியராலும் அடையப்பெறாத பெரும் பேற்றை யடைந்தாய்! ஆயர்குலக்கொழுந்தே! நின்தவமே தவம்! நின்பேறே பெறற்கரும்பேறு! தருமவடிவாகிய பசுக்களைப் பாதுகாத்த நின் குலத்தார் பயனெலாந்திரண்டு ஒருருவெடுத்ததென்ன விளங்கப்பெற்றாய். சனிப்பிரதோஷ விரதத்தின் மகிமையை யெவர்க்கும் தெரிவித்தாய். இப்பூசனையின் பலத்தினால் விஷ்ணுவானவர் நின் எட்டாந்தலைமுறைப்பிள்ளையாகத் தோன்றி வளர்வார். நின்குலத்துத் தோன்றும் நந்தகோபன் என்பான் ஒருவன் வளர்ப்பான். அதனால் உன் குலத்திற்கும் பிதிர்களுக்கும் உலகத்திற்கும் நன்மைகள் விளையுமென்றார்.

ஸ்ரீகரன் கண்ணபிரான் பிறப்பதும் வளர்வதும் செய்வனவும் அடிமையேன் இப்பொழுதே யறிந்தானந்திக்க வேண்டுகிறேனெனக்

கைகுவித்து நிற்க, ஆஞ்சநேயரும் அன்பனே அது எம்மாற் செய்தற்கியலாததாகலின், காளகண்டப் பெருமானது செல்வக் குமாரராகிய சுப்பிரமணியப் பெருமானை நினைத்துத் தவங்கிடப்பையேல் அவைகூடும் என்று செப்பி மலறந்தார். மற்றவர்களும் தத்தம்மிடம் சென்றனர்.

ஸ்ரீகரன் விந்தமலைக் கப்பாலுள்ள குமாரவனம் எனும் திருத்தலம் சென்று அங்கு பல வருடகாலம் கொடுந்தவமியற்றி யிருந்தான். அவன் தபசுக்கிரங்கி சுப்பிரமணியக் கடவுளும் தரிசனமளிக்க, அவரைக் கண்ணபிரான் அவதாரக் கூத்தையெல்லாம் தன் கண்களால் நடித்துக்காட்ட வேண்டுமென்று வேண்டி நின்றான். வேண்டினர்க்கு வேண்டினபடி வரமளிக்கும் குமரக்கடவுளும அப்படியே கண்ணபிரான் திருவவதாரத்தையெல்லாம் நாடகமாக நடித்துக் காட்டினர்.

இதையே சிறுபிள்ளைகள் இன்றைக்கும் காலைக்கும் கோபாலகிருஷ்ணன் கூத்தாக நடித்து ஆனந்திக்க ஸ்ரீஜயந்திவிளக்குப்போட எண்ணெய் தண்டிகூத்துப்போட்டு நடிப்பதுண்டு. இதை "ஸ்ரீ கோபாலகிருஷ்ணன் கூத்து" என்னும் தலைப்பின் கீழ் முன்னரே விவேகசிந்தாமணியில் பிரசுரித்திருக்கிறேம்.

[கோபாலகிருஷ்ணன் கூத்துப்போட நாட்டுப் புறத்துச் சிறுவர்கள் வீடுதோறும் எண்ணெய் தண்டும் பாட்டு]

### ஸ்ரீஜயந்தி எண்ணெய் தண்டல்.

சிசந்தி யம்பாரம்
சிவாத்திரி யம்பாரம்
ஸ்ரீ கிருஷ்ணராயருக் கெண்ணெய்!

பட்டினி யம்பாரம்
பரணி யம்பாரம்
பாலகிருஷ்ணனுக் கெண்ணெய்!

எண்ணெய் வார்த்தா லெண்ணெய்!
உளாக்கட்டி பொம்மை!
லாசிவாத்தா லாசி!
உ'ளாக்கட்டி பிசி!

புடுகு:—கொக்கு நிற்கநிற்கக்
குளம்வத்த வத்த
கோபாலகிருஷ்ணனுக்
கெண்ணெயோ வெண்ணெய்!

(1911 ஞ மேமாசத்து விவேகசிந்தாமணி, 19–வது வால்யம் 46-வது பக்கம் பார்க்க.)

———:*:———

## TRANSFUSION OF THOUGHT.

### வாதவித்தை–பாவனுமாற்றம்.

### The Parrot.

"The deep affections of the breast,
That heaven to living things imparts,
Are not exclusively possessed
By human hearts."

—*Thomas Campell.*

கிளி.

"ஆண்டவன் ஈண்டௌ உயிர்களுக் களிக்கும்
உண்மையா முள்ளத் துவகை நேசங்கள்
எண்ணில்ஜீவ ராசிக ளனைத்திற் குரித்தா
மண்ணில் வாழுமன் னுயிர்தம் மட்டிற் கன்றே."

## The Lord's Birthday-Experience.

### ஜன்மாஷ்டமி-யனுபவம்.

———:(*):———

"Get Away From Here"—"போ போ!—இஹம் விட்டு!"

பல்லவி

போபோ வென்றானவன்
பொய்மதம் பேசியே!

அனுபல்லவி.

போபோவென்றனையே பொய் மதம்பிடித்தவன்
போக்குவாத்தில்லாப் புதிதனைக் கண்டெங்காணேன் —(போபோ)

சரணங்கள்.

1. சொன்னசொல்தவறாதே சொன்னயம்மாறாதே
பின்னமாய்ப்பேச்சைப்பேசி பேய்மதம்பிடித்தையே —(போபோ வென்று)

2. தன்னயம்தலைக்கேறி தர்மம்தவறாதே
சொன்னயம்குலையவே சொன்னசொற்றுறாதே —(போபோ வென்று)

3. சின்னாட்பல்பிணிச் சிறுவாழ்வைநம்பியே
முன்னாட்பட்டதை முனிந்தின்றுமறந்தையே —(போபோ வென்று)

4. ஸ்ரீகிருஷ்ணனைவைத்துக் கடபடமாப் பூஜித்தே
ஸ்ரீகிருஷ்ணன் பேரையவன் பிறந்தன்று கொன்றையே —(போபோ வென்று)

5. கோபாலர் செய்தவங்க ளெல்லாமோ ருருவாகி
கோபால கிருஷ்ணனான ஜந்மாஷ்ட மீதிதியில் —(போபோ வென்று)

6. போபோவென் றனையே போக்கிலி சாக்கிலிபோல்
போபோவென் றன்முன்னே போகாதே காத்தருளே! —(போபோ வென்று)

7. ஐயகோ! புண்ணியனே! யாரிடம்போய் முறையிடுவேன்!!
மெய்யகோ தையலனே! புகலி..ந்தா னெனக்கிலையோ! —(போபோ வென்று)

8. வெய்யகோ வத்ஸலனே! வேதாந்த பூரணனே!
ஐயகோ! அடியேனை அஞ்சலென்று லாகாதோ! —(போபோ வென்று,

9. அஷ்டமித்திதி யிலையன் அவதார மாகுங்காலை
கஷ்டமீ தென்றேனை வெஞ்சொல்லா லடித்தையே —(போபோ வென்று)

10. சிஷ்டரைத் துஷ்டர் படுத்துமோர் பாடெல்லாம்
கஷ்டகஷ்டகஷ்டம்! ஸ்ரீஜயந்தியி லிதுவம்மா! கஷ்டகஷ்டகஷ்டம்! —(போபோ)

## The Emperor of Japan.
## ஜப்பான் சக்கரவர்த்தி.



பூமாதேவியின் புகழுக்கு உறைவிடமாயும் "உதய பானுக்ஷேத்திரம்"(Land of the Rising Sun) என்று சொல்லப் படுவதாயுமுள்ளது ஜப்பான். அத்தேச சக்கிரவர்த்தியாரான மிக்காடோ மட்ஸுஹிடோ அவர்கள் 1912-ம் ஆு ஜுலைமீ 29உ திங்கட்கிழமை காலஞ்சென்று விட்டார். ஆனால் இவ்வளவு சீக்கிரத்தில் அவர் இறைவனடி சேர்வாரென யாம் நினைத்திருக்கவில்லை. கனவிலும் நினையா இக்கடும் விபத்து கணப்பொழுதில் நேர்ந்ததை நினைக்க மிக்க மனத்தளர்ச்சி யடைகின்றோம். மிக்காடோ அவர்கள் ஐஹிக (இவ்வுல) ப்புகழ்பெற ரணரங்கத்தில் தீரங்காட்டி வெற்றி யடைந்ததை யொப்ப ஆமுஷ்முக (பரலோக)த்தில் மறலியுடனும் சமர் புரிந்து அன்னார் சாயுஜ்ய பதவி பெற்றனர்போலும். மிக்காடோவின் அரண்மனையைச் சுற்றி பக்தி விசுவாசத்துடன் காத்திருந்த ஜனங்களனைவரையும் அவர் தம் குடும்பத்தினரையும் மனம் வெதும்பி முகம்வாடி மெய்சோர்ந்து கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகும்படியான நிலையில் விட்டுச்சென்ற பரிதாபக் காக்ஷியை யாம் எப்படி வர்ணிப்பது? ஐயோ பாவம்! எத்தனை இராஜபக்தியுள்ள ஜனங்கள் மன்னனையிழந்த விசனம் மேலிட்டு தம்முயிரை மாய்த்துக் கொள்வார்கள். இவ்வளவு ஜனவிசுவாசத்தையும் பெருமையையும் சம்பாதித்துக்கொண்ட மிக்காடோவின் சக்தியையும் தேச சரித்திரத்தையும் சுருங்கச் சொல்லி விளங்க வைப்போம்.

**ஜப்பானின் வனப்பு.**—ஜப்பான் என்பது ஆதி கண்டமென்று சொல்லப்படும் ஆசியா கண்டத்தின் வடகீழ்ப்பாகத்தில், பஸிபிக் மகா சமுத்திரத்திலிருக்கும் ஒரு தீபகணமாகும். இதில் எஸ்ஸோ, நிப்போன், ஷைகாக், கிவ்ஷ்யு என்னும் நான்கு பெரிய தீவுகளும் மற்றும் சில சிறிய தீவுகளுமடங்கியுள. இத்தீவுகளில் எரிமலைகள் விசேஷம். அதி வேகமாய்த் தெள்ளிய நீருடன் செல்லும் சிறிய நதிகளும் பலவுள. நெல் விளைவு மிகவும் அதிகம்; ஜப்பானியர்கள், இந்தியர்களைப்போல் விவ்வசாயத்தில் மட்டும் தேர்ச்சியடைய நினைந்து சந்துஷ்டி யடையாமல் ஆண் பெண் இருபாலரும் கைத்தொழி லபிவிருத்தியிலும், கல்வி யபிவிருத்தியிலும் மிக்க ஆர்வங்கொண்டு கண்டதைக் கணப்பொழுதிற் கற்றுக் கொள்ளும் சாமர்த்திய சாலிகளெனப் பெயரெடுத்திருக்கிறார்கள்.

**மிக்காடோ மட்ஸுஹிடோ** —காலஞ்சென்ற ஜப்பான் சக்கரவர்த்தி மட்ஸு ஹிடோ அவர்கள், 1862-ம் வருஷம் கார்மேகங்களைக் களைந்து தம் கதிரை வீசிக்கொண்டு கிளம்பும் இளஞாயிறைப் போல் ஜப்பானியரது சாயுஜ்ஜிய பதவியையே த கையிற் கொண்டவராய் உதயமானார்.

1867-ம் வருஷம் ஜனவரி மாதம் தரணியை யாளும்படி தனியே விட்ட தம் தந்தை ஒாஹிடே வின் சிம்மாசனத்தில் ஏறி அடுத்த வருஷ நாவில் தேசாசாரப்படி ஜனங்களால் பட்டமு வும் பெற்றார். அக்காலத்தில் ஜப்பான் விளங்கி பரிதாபகோலத்தையும் ஜனங்களனுபவிக்கும் கஷ்ட நிஷ்டூரங்களையும் கண்ணுற்ற மட்ஸு ஹிடோ த மிருப்பிடத்தைத் தனியே யகற்றுவது நலமென நினைந்து, கியோடோ என்னும் கிழக்கரை விட் டோக்கியோ என்னும் பெரும் நகர்க்கு மாற்றின அது முதல் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் ஜப்பான் நன்னிலைமை பெற்று சுக் பக்ஷச் சந்திரன்போல் வன்மையிலும் கௌரவத் லும் மேன்மையடைந்து விளங்கி வருகிறது. மட்ஸு ஹிடோ அவர்கள் தமது சாமர்த்தியத்தால் தம் ஜனங் களது தயவையும் அந்நிய நாட்டாரது அருளையு பெறவே அடிக்கடி சச்சரவு செய்து கொண்டிருந் உள்நாட்டு அதிபதிகள் விளக்கைக் கண்ட ஈசலை போல் தம் சுவாதந்தரியமனைத்தையும் தத்தம் செய் மிக்காடோவின் மித்திர சேவகர்களா யமர்ந்தன அவர்களுக்குச் சக்கிரவர்த்தியிடம் உள்ளன்பு பே பட்டது. குடிகள் ஒவ்வொருவரும் தம் வீட்டில் ம காடோவின் முக உருவம் வைத்துப் பூஜை செய் வாரம்பித்தனர். இச்சமயத்தில் மிக்காடோ அ கள் நாட்டை நலம்பெறச் செய்யக் கல்வியும் கை தொழிலும் அவசியமென்பதை யுணர்ந்து அந் நாட்டிற்குச் சென்று அங்கங்கு தம் பிரஜைகளை தூண்டி உதவியுஞ் செய்தனர். இவ்விதம் சகல பத்தையும் தாய்போலும் தந்தைபோலும் தம் பிர களுக்கு ஏற்படுத்தினார். இவர் தம் வலிமை முதல் முதல் பிற நாட்டார்க்குக் காண்பிக்கத் தொ த்த சண்டை 1894-ல் நடந்த சீன யுத்தமாகு இதில் மிக்காடோ காண்பித்த சாமர்த்தியம் அர என்று பட்டப்பெயர் வகித்த அனைவரையும் ஆச் யப்படும்படி செய்தது. பிறகு ருஷியாவுடனும் ச டை தொடுத்து ஜெயம்பெறவே, இவரது பிரதா எத்திசையும் மலிந்து இணையில்லாப் புகழ் லாயிற்று. இவர் 1869-ம் வருஷம் பிரின்ஸஸ் ஹ வென்னுஞ் சீமாட்டியை மணஞ்செய்து கொண்ட இவருக்கு ஒரே ஆண் குழந்தைதான். அவர் த யோஷி ஹிடோ. அந்த இளவரசர் தான் இப்போ பட்டத்திற்கு வந்திருப்பது.

ல. ஆனந்தய்யர்.

———:※:———